# பொருளடக்கம்

# அறிவுரைக் கோவை

## 1. இலக்கியக்கல்வி

அறம், பொருள், இன்பம், வீடு என்று நால் வகைப் பொருள்களுள் ஒன்றனையேனும் பலவற் றையேனும் நாநாவித வருணனைகளோடு சிறப் பித்துக் கூறும் நூல் இலக்கியம் எனப்படும். இலக்கியம் எனினும் காவியம் எனினும் ஒக்கும். இலக்கியம் பெரும்பான்மையும் குறிப்புச் சொற் களும், குறிப்புப் பொருள்களும் மிகுந்து வருவ தென்பது. பொருளாழமின்றி வெளிப்படையான சொற்களால் ஆக்கப்படுவன சிறந்த இலக்கியமென மதிக்கப்படாவாம். குறிப்புச் சொற்களும் பொருள் களும் விரவிய இலக்கியங்களே தமிழறிஞர்களால் உவந்து கொண்டாடப்படுவன. தமிழிலுள்ள பழைய காவியங்கள் எல்லாம் இவ்விதமாகிய பெருஞ் சிறப்புடையன. புலவனுடைய அறிவு உலக இயற்கை யழகிற் படிந்து அதன் வண்ண மாய்த் திரிந்து தெளிவுற்று விளங்கும்போது, அப் புலவன் மனதிற் சுரந்து பொங்கும் அரிய பெரிய கருத்துக்களை அறிய நாம் அவாவுகின்றோம். அக் கருத்துக்களை அழகாகக்கோத்து இன்னோசை புணர்த்திச் சொல்லும் பாட்டே மக்கள் மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாகும். இங்ஙனம் இயற்றப்படும் பாட்டுகள் இயற்கை யழகுடன் பொருந்திப் படிப்ப

வர்களுக்கு மிகக சுவை விளைக்கும் என்பது நன்கறிந்தது.

தன் மனத்துதித்த உயரிய கருத்துக்களையும் தூய அறிவையும் சொற்கள் மூலமாக அழகுற வெளிப்படுத்திச் செய்யுள் செய்யும் நல்லிசைப் புலவனுக்கும், உலக வியற்கையினையும் உயரிய கருத்துக்களையும் பலவகை வண்ணங்களால் வரைந்து காட்டும் ஓவியக்கலை வல்லானுக்கும், மனத்திற்கொண்ட கருத்துக்களைக் கல், சுண்ணம் முதலிய கொண்டு உருப்படுத்திக் காட்டும் சிற்பம் வல்லோனுக்கும் ஒற்றுமை மிக உண்டென்று அறிதல்வேண்டும். ஓவியம் வல்லான் வரைகின்ற சித்திரமும் சிற்பி இயற்றும் உருவமும் கட்புலனுடையார்க்கே பயன்றருவன. புலவன் இசைக்கின்ற பாட்டோ கண் முதலாகிய புலன்களின்றாகத்தே விளங்கும் உள்ளத்திலே தோன்றச் சுவை பயப்பதாகும் என்றறிக. புலவனுடைய பாட்டு அகக்கண்ணுக்கு விடயமாவதென்பது. ஓவியக்காரன் பல நாட்களாக வருந்திச் செய்து காட்டும் ஒரு கருத்தை, ஒரு புலவன், எளிதிற் சில சொற்களால் திறம்படச் சொல்லிக் கேட்போர் மனத்திற் பெருவியப்பினை விளைப்பான். அதனல் ஓவியக்காரன் வண்ணங்கலந்து வரைந்து காட்டும் படம்போல, புலவனும் சொற்களைக் கொண்டு செய்யுஞ் செய்யுளும் ஒரு படமாகுமென்பது கருத்து. சித்திரப்படத்தையும் கைபுனைபாவையையும் புறக்கண்ணாற் கண்டு அறிந்து மகிழ்கின்

றோம்; புலவனுடைய பாட்டாகிய படத்தை அகக் கண்ணாற்கண்டு களிக்கின்றோம். இவ்வாறு மனக் கண்ணாற் கண்டறிந்து இன்புறுதலே செய்யுள் படித்தலின் பயனெனக் கொள்ளல்வேண்டும். அவ் வாறே மாணாக்கரும் செய்யுளிலமைந்துள்ள படத்தை அகக்கண்ணாற் கண்டு அறிந்து இன்புறச் செய்தலே செய்யுள் படிப்பித்தலின் நோக்கமும் முறையுமெனை அறிதல் வேண்டும்.

மேலும், இலக்கியம் படிப்பிக்கும் ஆசிரியர் தம்மை ஒருநூதனசாலைப் பாதுகாவலனாக வைத்துத் தம்மாணாக்கரை நூதனசாலை பார்க்க வந்தவராகக் கொண்டு அச்சாலையின் கதவைத்திறந்து அவரை உள்ளழைத்துச் சென்று அங்கிருக்கும் நூதனங் களைத் தேடிப்பார்த்து அறியும்படிவிட்டு, இடை யிடையே, "இன்னது இன்னது பார்த்தீரோ? இது என்னவென்று எண்ணுகின்றீர்? இங்கே இருக் கும் இப்பொருள் உமக்கு ஆர்வம் விளைவிக்கக் கூடும்" என்றிவ்வாறு வழிகாட்டி நடத்தி அறியச் செய்தல் தக்க முறையாகுமென்ப. புலவன் சொல்லால் இயற்றிய படத்தை மாணாக்கனும் தன் மனோபாவனையால் ஒரு படமாகத் தன் அகக்கண் ணாற்கண்டு இன்புறுதல் வேண்டும்.

உதாரணமாக,

"தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக் [கத்
கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகள் விழித்து நோக்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ"

என்பது புலவன் சொல்லால் தீட்டிய ஒரு சித்திரம். இதனை அன்னதாக அகக்கண்ணுற்கண்டு இன்புறுதலே இதனைப் படித்தலின் பயனாகற்பாலது. இதனை வண்ணமும் எழுது கோலுங்கொண்டு சித்திர ரூபமாய் வரைந்து காட்டுதலும், இதிற் குறிப்புப் பொருளாய் உருவகிக்கப்படும் ஓர் அரசி கொலுவீற்றிருக்குங் காட்சியைப் படம் வரைந்து காட்டுதலும், செய்யுட் கருத்தை வெளிப்படையாகப் புலப்படுத்துவதென்பதறிக.

பெரும் புலவனுக்கிய செய்யுட்களைப் படித்து அவற்றிலுள்ளுறையாகிய படத்தை அகக்கண்ணுற் கண்டு இன்புறுதல் மாத்திரையோடமையாது; அவ்விதமான செய்யுட்களைத் தாமும் நவமாய் இயற்ற விரும்புதலும், அவ்வாறு இயற்றுதலும் செய்யுள் படித்தலின் பயனாகக் கொள்ளுதல்வேண்டும். நவமாகச் செய்யுளியற்றல் தமக்கு முற்றமுடியாத செயல் என்னுங் கோழை எண்ணம் மாணுக்கர் மனதில் உதியாவண்ணஞ் செய்தலும் அவர் தம்மை அச்செயலில் ஊக்கப்படுத்துதலும் ஆசிரியர் கடனாகும். மாணுக்கரும் மற்றைய பாடங்களை யடுத்துச் செய்கை முறையில் பூமி சாத்திரப்படங்கீறியும், கட்டுரைகள் வரைந்தும், உருவங்கள் சித்திரித்தும், கதைகள் நடித்தும் பயின்று தேர்ச்சிபெறுவது போலப் புதிகாகப் பாட்டுகளிசைத்துப் பயின்று வருதலும் ஏற்புடைத்தென்க.*

* ஞாயிறு

# 2. சீவப்பிராணிகளின் நிறமும் அதன் பயனும்

பண்டைக்காலந் தொட்டு ஆடுதலிற் பெயர்பெற்ற ஆண்மயில் மட்டும் அழகிய தோகை கொண்டிருப்ப தேன்? நல்லரவந் தனது படத்தை விரிக்க அதனிடையில் அரக்கன் கண்போ லிரண்டு பயங்கரமான இரேகை தோன்றுவதேன்? பச் சோந்தியோ பன்முறையுந் தன்னிறத்தை மாற்றி யொளிப்பதேன்? சிலந்திப் பூச்சிகளுட் சில எறும் பைப்போல் வேடம் பூண்டு பார்ப்போரை ஏமாற்று வதேன்? இன்ன வினக்கட்கு ஒருவாறு விடை பகர்வான் எடுத்துக்கொள்ளப்பட்டது இக்கட்டுரை, சீவப்பிராணிகளிற் சில ஒருநிறங்கொண்டும் வேறு சில பல நிறங்கலந்து மாயமேனி யுடையனவாம். அங்ஙனம் பூண்ட வர்ணத்தால் அவற்றிற்கு எத் துணைப் பயனுண்டாம் என்னும் பொருளைப்பற்றி ஆராய்தல் தகுதி யுடைத்து.

உயிர்நூல் வல்லார் சீவப்பிராணிகளின் நிறத்தை அதின் பயனுக்குத் தக்கவாறு பிரிவு செய்திருக்கின்றனர். அப் பிரிவுகளில் மேம்பட் டன ஆறேயாம். அவையாவன: பயன்படா நிறம், தற்காப்பு நிறம், வசீகர நிறம், எச்சரிக்கை நிறம், போலி நிறம், சம்போக நிறம் எனப்படும்.

காகங் கறுத்திருப்பதால், அதற்கு யாதானும் பயனுண்டாவென்ற கேள்விக்குப், பயனின்று என உத்தர மளித்தலே தகுதியாம். இத்தகைய நிறத்துக்குப் பயன்படா நிறமென்று சாத்திரிகள் பெயரிட் டிருக்கின்றனர்.

தாங்கொண்ட நிறத்தால் தம்மைத் தம் எதிரியிட மிருந்து காப்பாற்றிக்கொண்டு இடையூறின்றிக் காலங் கழிப்பன சில பிராணிகள். இங்ஙனம் பயன்படும் நிறத்திற்குத் தற்காப்பு நிறமென்று பெயர் கொடுத்திருக்கின்றனர். மரங்களிற் பசுமை வாய்ந்த இலைக ளிடையே இலைக்குந் தனக்கும் புலப்படா வண்ணம் பச்சைப்பாம்பு சீவிப்பதை யாவரு மறிவர். அதனை இலகுவில் இலைகளின் மத்தியினின்று வித்தியாசப்படுத்திக் காண்பது மிக வரிதாகும். கூர்மையான கண்ணுள்ளவர்களே அது மரக் கொம்புகளின்மேல் நேராய் இழைந்தோடுவதைக் கண்டு ஆச்சரியப்பட் டிருப்பார்கள். அது அவ்விதம் தன்னையுங் காப்பாற்றிக்கொண்டு மரங்களின்மேல் வந்தமரும் சிறு பறவைகளையும் ஆகாரமாகக் கொன்று விழுங்குவதற்குப் பயன்படுதல் அதன் பசுமை நிறமேயாம்.

இவ்வண்ணமே, வேறொரு பாம்பு பாலைவனங்களிலும் மணற் சாரலான விடங்களிலும் வசிக்கின்றது. இதை நம்மவர் இரட்டைத்தலைப் பாம்பென்றழைப்பர். மற்றப் பாம்புகளைப்போல் இதற்கும் ஒரு தலைதானுண்டு; ஆனால், அதன் வால் கூர்

மையா யிராது சற்றுக் கூழையா யிருக்கும். இப்படி யுருண்டிருக்கும் வாலின்மேல் இரண்டு கறுத்த புள்ளிகளுண்டு. இப்புள்ளிகளைக் கண்ணென்று மயங்கி வாலையுந் தலை யென்பார்களோ? இம்மணற் பாம்பு தன்னைச் சுற்றிலுமுள்ள மணலின் நிறத்தையே கொண்டது; மணலின்மேல் புரளுங்கால், மணலுக்கு மிதற்கும் பேதங் காண்பது மிகக் கடினமே. இங்ஙனமே தம்மைச் சுற்றியிருக்கும் பொருள்களின் நிறத்தை மேற்கொண்டு வாழ்வன, தோட்டங்களிற் செடிகளின்மே லகப்படுஞ் சில சிலந்திப் பூச்சிகளாம். சில சிறு கொம்புகள் போலும், சில விதைகள் போலும், சில பூ வரும்பு கள் போலும் வேடம் பூண்டு பார்ப்போரையும் தம் மெதிரிகளையும் ஏமாற்றுவன. வண்ணாத்திப்பூச்சி யென்னும் அழகிய பூச்சிகளின் கூட்டுப்புழுக்களும் இன்னணமே மரக் கொம்புகள்போல் வேடந் தரித்து மரத்தி னிலைகளைச் சிறிது சிறிதாய்த் தின்று அழிக்கின்றன. இவற்றைக் கண்டுபிடித்து ஓட்டிச் செடிகளைப் பாதுகாக்க யாம் எத்தனிக்கும் போது அவற்றுட் சில•கை கால்களைச் சுருக்கிக் கொண்டு எதிர்த்து நின்று நம்மைப் பயமுறுத்து வது நமக்குப் புன்னகை யுண்டாக்கும்.

கோயமுத்தூர் பழனி நீலகிரி முதலிய இடங் களில் இலைப்பூச்சி யென்றொரு பிராணியைக் காண லாம். அதற்கும் அது தின்னு மிலைக்கும் எவ்வித மாறுபாடுங் காண்ப தரிது. நமது கண்களுக்

கெதிரிலேயே இலையைத் தின்றுகொண்டிருக்க, அதை நாம் காண்பது இயலாததாகும். நிறம் மட்டும் இலையைப் போன்றதுமன்றி, அதின் அங்க வமைப்பும் இலையின் அங்கவமைப்பைப் பெரிது மொத்திருக்கும்; ஆகவே, அது இலையோ இலைப் பூச்சியோ என்று சந்தேகப்படுவது சாதாரணமாகும். இதைப்போலவே செடிகளில் வசிப்பது இன்னுமொரு பூச்சி; அதைக் கும்பிடுபூச்சி யென்பார்கள். அதற்கு ஆங்கிலத்தில் 'செபப் பூச்சி' என்று மறு பெயரு முண்டு. இப்பெயர் கொள்ளவேண்டிய காரணமென்னை? நாம் செபஞ் செய்யுழி இரண்டு கைகளையுஞ் சேர்த்துக் கூப்புவதுபோல், இதுவு முட்காருங்கால் தன் முன்னிரண்டு கால்களையுஞ் சேர்த்து உயரத் தூக்கி உட்காரும். இது இலையுருவங்கொள்ளாது கொம்புகளைப்போல் நீண்டு மெலிந்திருக்கும்.

முதுகெலும் பில்லாச் சில பிராணிகள் கடலின் மேற்பக்கத்துச் சீவிக்கின்றன. அவற்றைப் பெரு மீன்களும் கடல்வாசிகளும் ஆவலாயுண்ணுமாதலின், எதிரியிட மிருந்து தப்பியோடிப் பிழைக்கும்பொருட்டு இவற்றுட் சில, கண்ணாடிபோற் றெளிவான தேகமுடையன. தண்ணீருக்குமேல் நின்று நோக்கின் இவை கடல்நீர் நிறங்கொண்டிருக்கும், கடலின் கீழிருந்து பார்க்க, ஆகாயத்தின் நீலவர்ணங் கொண்டதாகப் புலப்படும். ஆகவே எவ்வண்ணம் நோக்கிலும் இவற்றின் சுயவுருவந்

தோன்றுது. இத்தகைய உதாரணமும் இவ்வகுப்பிற் சேர்க்கப்படுதல் வேண்டும். இன்னுமொரு உதாரணம். கணவாய் மீன் என்று சொல்லப்படும் ஒருவினேதப்பிராணி கடலில் வசிக்கின்றது. அதன் தலையைச் சுற்றிப் பத்துக் கைகளும், தலையின்மீது விசாலமான இரண்டு கண்களுமுண்டு. பச்சோந்தியைப்போற் கணவாய் மீனும் தன்னிறத்தை அடிக்கடி மாற்றும். புட்ப ஒளிகள்போல இதன்நிறம் கண்களைப் பறிக்குமளவு இடைவிடாது மாறும். இந்த வேடிக்கையைக் கண்ணுற்ற இதனெதிரிகள், 'இஃதென்னே? ஓர் இராக்கதன்போலும்; கிட்ட நெருங்கினல் விழுங்கிவிடுமோ' என்று நினைத்துப் பயந்து பல திக்குகளிலு மோடும்; ஆனல் இது வெறும் மாயவித்தை என்று பழக்கத்தால் அறிந்த சில மீன்கள் கணவாயை விழுங்கப் பின்றொடர்ந்தோடும்; அக்காலத்து அது வேறு ஒரு உபாயத்தால் மீனே வென்று ஓடி ஒளிக்கும். எதிரியைத் தன் னெதிரிற் கண்டதும், தன்னிடத்துள்ள மை நிறைந்த ஒரு பையைத் திறக்கவே, அந்தோ! கறுப்பு மை கடல்நீரிற் கலக்க அதனைச் சுற்றிலுமிருளடர்ந்து போம். அவ்விருளில், துரத்தும் மீன் வழிதடுமாறித் திகைத்து நிற்க, கணவாய் மீன் கண்ணுக் கெட்டாத தூரம் நீந்தி ஓடி மறைந்து போம். என்ன வாச்சரியம்!

கணவாய் போலவே பச்சோந்தியும் பன்முறையுந் தன்னிறத்தை மாற்றுகின்றது. பல்லி இனத்

துள் வெகு அதிசயமான இப்பிராணி மிகுதியும் ஆபிரிக்காவிலுண்டு ; தென்னிந்தியாவிலும் இரண்டொரு விதம் வசிக்கின்றது. அடிக்கடி தன் வர்ணத்தை மாற்றுவதால் அது கண்ணுக்குச் சுலபமாகப் புலப்படுவதில்லை. சிற்சில சமயங்களில் மிக மெலிந்து தானிருக்குங் கொம்பொடு கொம்பாய் மறைந்து போம். வேறு சில சமயத்துக் காற்றை நிறைய விழுத்துச் சுய உருவினும் நான்கு மடங்கு பருத்துக் காட்டும். நாக்கு மிக நீண்டது ; நுனியில் பருத்துள்ளது ; ஏழு அல்லது எட்டு அங்குலத்துக் கப்பாலுள்ள பூச்சியை ஒருவிநாடி நேரத்துட் கவரக் கூடியது. இவற்றினும் வியக்கக்கூடியது பச்சோந்தியின் கண்ணே ; ஒரு கண் நேரில் பார்க்க மற்றொரு கண் பின்னுற் பார்க்கும் அமைப்புடையது.

இனிச் சில சீவப் பிராணிகள் தமது நிறத்தையே ஒரு உபாயமாகக் கொண்டு, அவ் வுபாயத்தாற் பிற பிராணிகளை வசீகரித்து அவை கிட்ட நெருங்கவே அவற்றைத் தம்மிரையாக்கிக் கொள்கின்றன. ஆசியாக் கண்டத்துச் சில பாலைவனங்களில் மணல் வர்ணங் கொண்ட ஒரு பல்லி உண்டு. அதன் வாயினிரு மூலைகளிலும் இருக்கும் மிகச் சிவந்த இரண்டு இரேகைகள் தூரப் பார்வைக்கு அழகிய மலர்கள் போற்றோன்றும். பூவிலுள்ள தேனைக் குடிக்க அலைந்து திரியும் சில பூச்சிகள் அப்போலி மலர்களைக் கண்டு மயங்கி நெருங்கவே வஞ்சனையிற் றேர்ந்த மணற் பல்லி, பூச்சிகளைப்

பிடித்து வெகு களிப்புடன் தின்னும். தூண்டிற் காரமீன் என்று பெயர் பெற்ற ஒரு மீனும் இதே மாதிரிச் சூது செய்கின்றது. இதன் வாயைச் சுற்றிலும் ஓயாது அசைந்தாடும் சிம்புகளுண்டு; அவற்றைச் சிறு புழுக்களென்று நம்பி வேறு சிறு மீன்கள் தின்பதற்காக அருகிற் போனவுடன் அவை தாமே இரையாகிவிடும். இத்தகைய நிறத்துக்கே வசீகரமென்று பெயரிட்டோம்.

சில பிராணிகள் தாங்கொண்ட வர்ணத்தால் பிறரைப் பயமுறுத்துகின்றன; 'எனக் கருகில் வரேல், வரினபாயம்' என்று தத்தமது நிறத்தால் எச்சரிக்கை செய்கின்றன. விடப் பாம்புகட்கெல்லாம் அரசனுகிய நல்லரவத்துக்கு, இந் நல்ல குணம் பற்றி யன்றே அப்பெயர் வந்தது. ஒருவனைக் கண்டதும் சீறிக் கொண்டு படத்தை விரித்துக் கொண்டு ஓடி வருதல் அது விடத்தாற் றீண்டி உயிரை மாய்ப்பதற்கே அங்ஙனஞ் செய்கின்றதென்று கொள்வது சரியன்று. ஏனெனில், அது நமக்குண்டாகக் கூடிய அபாயத்தைப்பற்றி அதனுல் எச்சரிக்கை செய்கின்றதே யொழிய விடத்தாற் றீண்டிக் கொல்வதற் கன்று. நஞ்சோ அடிக்கடி அபரிமிதமா யுண்டாவதில்லை; சிறிது சிறிதாகவும் மிகச் சாவகாசத்துடனும் உண்டாகும். அவ்வளவு அருமையாக வுண்டாகும் விடத்தாற் கண்டவற்றை யெல்லாம் தீண்டி விடத்தை வீணுக்குவதில் நல்லபாம்புக்குச் சிறிதும் பிரியம் இராது. ஆகவே,

அதை எவ்வளவுக் கெவ்வளவு சுருக்கமாகச் செல விடுகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு பாம்பிற்குப் பயனுண்டாம். இந்த நற்குணம் பற்றியே, நமக் குத் தகுந்த எச்சரிக்கை செய்து, நாம் அப்பால் விலகும்படி கட்டளைசெய்து தன் விடத்தைக் காப் பாற்றிக் கொள்ளுகின்றது. இவ் வண்ணம் எச் சரிக்கையிட முக்கிய காரணமா யிருப்பது இதன் படமே. இதை விரித்தாட, இதன்மேலுள்ள கண் கள் போன்ற இரண்டு பயங்கரமான இரேகைகள் பார்ப்போரைப் பயமுறுத்தி அப்புறம் ஓடச் செய் கின்றன.

இங்ஙனமே, தம்மிடத்திருக்குமொரு பெருங் கெட்ட குணத்தைப் பிறரறிந்து விலகிப்போம் பொருட்டே நஞ்சு நிறைந்த கடற் பாம்புகளும் கண்களைக் கவரும் பலவித வர்ணம் தீட்டப்பட்டுள் ளன. கடற்பாம்புகளி லொன்று கடித்தால் உடனே மரணமுண்டாகும். அமெரிக்காவின் வெப் பப் பிரதேசங்களில் பவளப் பாம்பு என்ற ஓரரவ முண்டு; அது கொடிய விடங்கொண்டது; மிகக் கறுத்துஞ் சிவந்துமுள்ள மேனியுடையது. இது இத்துணைப் பளபளப்பான நிறங் கொண்டது பிற ரைப் பயமுறுத்துதற்கே. இத்துணைய வெறுப்புள்ள குணங்கள் பற்றியே சில வண்ணாத்திப் பூச்சி பட் டுப் பூச்சி இவற்றின் புழுக்கூடுகள் தங்க மயமான மஞ்சள் நிறமுடையன. இவற்றை யுண்டால் உடனே மரண முண்டாவது திண்ணமாதலால்,

பூச்சிகளைத் தின்று காலங் கழிக்கும் பறவைகள் இத் துர்க்குணம்பற்றி அப்புழுக் கூடுகளைத் தீண்டவும் மாட்டாவாம்.

இராக் காலங்களில் நமது வீடுகளில் ஓடித் திரியும் ஒரு சிறு வண்டை யாவரும் பார்த்திருத்தல் கூடும். அதன்மேல் இரட்டை வரிசையாய்க் கறுப்புப் புள்ளிகள் தோன்றும். வெகு எளிதாய்ப் புலப்படும் இவ்வாறு வர்ணங் கொண்டதற்குக் காரணம் தன்னிடத்துள்ள ஒரு துர்க் குணத்தைப் பிரசித்தப் படுத்தும் பொருட்டே யாம். அதாவது, தற்செயலாய் அதை யாரேனும் தொட்டால், அதன்பின் புறத்தினின்றும் 'வெடீர்' என்ற சத்தத்துடன் ஒருவிடத் திராவகம் வெளிவரும்; அது நமது கையைச் சுடும்; சிறு பூச்சிகளின்மேற் பட்டால் அவை உடனே உயிர் துறக்கும். இங்ஙனம் சத்தம் பண்ணுவது காரணமாக இதற்குப் பீரங்கி வண்டென்று பெயராம்.

இன்னும் சில பிராணிகள் மற்றவற்றைப் போல் வேடந் தரிப்பன. சிலந்திப் பூச்சிகளிற் சில எறும்புபோலும், தேனீக்கள் போலும் வேடம் பூண்டு அவற்றோடு வித்தியாசமின்றிக் கலந்து அவற்றிற் சிலவற்றைத் தம் நூலாற் சுற்றித் தமக் கிரையாக்கிக் கொள்ளும். இவ்விதம் மித்திர பேதஞ் செய்யும் சிலந்திப் பூச்சியின் கபடத்தை எறும்பாவது தேனீயாவது சிறிதும் அறிந்திலது. இது போலவே; ஒருவித ஈயும் தேனீயைப்போல் வேடந்

தரித்துத் தன்னுடைய எதிரியிடம் அகப்படாது பிழைக்கின்றது. கொடுக்குக் கொண்டதும், மஞ்சளும் கறுப்புங் கலந்த நிறமுள்ளதும், எச்சரிக்கை நிறம் தீட்டப்பட்டதுமான ஒரு குளவியுளது. அதைப்போல், ஓர் ஈயும் வேடம் பூண்டு, கழுதை தன்மேல் புலித்தோலைப் போர்த்துக் கொண்டு தனது எதிரிகளை ஏமாற்றினதுபோல் பிறர்க் கிரையாகாது காலங் கழிக்கின்றது.

கடைசியாகச் சிலப்பிராணிகளின் நிறம், ஆண் பெண்ணைக் கவருவதிற் பயன்படுகின்றது. சிலந்திப் பூச்சிகள் தம் வீரச் செய்கைகளாலும், சிலம்பாட்டங்களினாலும் மணப் பெண்ணின் கையைப் பிடிக்கும். குயில் போன்ற சில பறவைகள் தம இனிய குரலாற்கானங்கள் பாடித்தம் மனையாட்டியைக் களிப்பிக்கும். இவ் வண்ணமே தமது அழகிய மேனியைக் கண்டு பெண்மயில்கள் ஆசைகொள்ளும்பொருட்டுத் தம் செவ்விய தோகையை விரித்தாடு மாண் மயில். எதனுடைய தோகை வெகு அழகாய் இருக்கின்றதோ அதனையே கைப்பற்றும் பெண்மயிலும். இது காரணம்பற்றியே, சாதாரணமாகப் பறவைகளின் சேவல்கள் பேட்டுப் பறவைகளைவிட வனப்புவாய்ந்த தோகை கொண்டிருக்கின்றன.

பல பிராணிகட்கும் பலவாறு தாங்கொண்ட வர்ணமானது பயன்படுகின்றதென்பது மேற் போந்த உதாரணங்களாற் றெள்ளிற் புலப்படும். வேறு உதாரணங்கள் அநேகமுள.

## 3 * "ஆற்றுட் செத்த எருமை ஊர்க் குயவர்க்கு இழுத்தல் கடன்"

**வா**ணிகச் சாத்தொடு சென்ற ஒருவன், அச் சாத்தினின்றும் பிரிந்து ஒரு பட்டினத்துட் சென்று பல வெருமைகளைப் பொருள் கொடுத் தேற்றான்; ஏற்றுத் தந்நாடு சேறற்கு ஒருப்பட்டுப் பலப்பல காவதந் கடந்து ஒரு கான்யாற்று அடை கரை யண்மி அவ்வெருமைகளை நீரருந்தச்செய்து அயர் வுயிர்த்துப் பின்னர் அவ்வாற்றைக் கடக்கு மமயத்து, காலமல்லாத காலத்துச் சேய்மைக்கண் பெய்த மழையான் பொருக்கென வெள்ளந் தோன்றி அவ்வெருமைகளையெல்லாம் அடித்துக் கொண்டு ஓர் ஊர்ப்புறத் தொதுக்கிவிட்டது. அதனை யுணர்ந்த அவ்வூரவர் அவைகளை ஈர்த்துக் கொணர்ந்து கரை சேர்த்தற்குப் பலரை வேண்டி யும் நாற்றம் மிகுதியாக விருந்தமையின், ஒருவரும் ஒருப்பட்டிலர்.

இதனை யுணர்ந்த பெரியா ரொருவர் இங்ஙன மாய செயல் நேரிடின், இச்செயலை இன்னவர் செய்து முடித்தல் வேண்டுமென நம்மூர் அடங்கலி லிருக்கு மதனைக் கணக்கனை அழைத்துக் கேட்பின் உண்மை வெளியாமென உரைத்தனர்.

* தொல்காப்பிய சேனாவரையர் உரைப்பிரதியிற் கண்டது.

அவ்வாறே கணக்கனை அழைத்துக் கேட்க அவன் அடங்கலை எடுத்துவந்து 'கண்ணுறீஇக் கழறுகின் றேன்' எனக் கூறித் தம்மில்விற் சென்று தனக்கு ஆண்டுதோறும் நன்கொடையாகக் கொடுக்கும் பொருளை அவ்வாண்டிற் கொடாத அவ்வூர்க் குய வரை யொறுத்தற்குத் தக்க வமய மிதுவேயெனக் கருதி,

"காட் டெருமுட்டை பொறுக்கி
மட்கலஞ் சுட்ட புகையான்
மேற்கே மேகந் தோன்றி
மின்னி யிடித்து மழைபொழிந்து
யாற்றில் நீத்தம் பெருகி
யடித்துக் கொல்லும் எருமைகளை
ஈர்த்துக் கொணர்ந்து கரையேற்றல்
அவ்வூர்க் குயவர்க் கென்றுங் கடனே."

என்று ஒரு பழைய ஓலையில் வரைந்து அவ் வடங்கலோடு சேர்த்துக் கட்டி அவ்வூரவர் முன் கொண்ர்ந்து கட்டை யவிழ்த்துப் பல ஏடுகளைத் தள்ளிப் படித்துக் காட்டினன். அதனைக் கேட்ட பெரியார் பலரும் குயவன் சூளையி னெழுந்த புகையானுய மேகந்தந்த நீரான் எருமை சாதலின், இவ்வூர்க்குயவரே இவைகளைக் கரையேற்றல் முறை யென முடிவு செய்தனர்.

---

# 4 சாசனம்

சாசனம் என்றால் ஓர் அரசனால் கொடுக்கப்பட்ட தோர் அறிக்கை அல்லது உத்தரவு. இந்த உத்தரவுகள் இப்போது பெரும்பாலும் கோவில் களின் மதில்களிலும், கர்ப்பக்கிரகங்களின் வெளிப் பக்கக் கற்களிலும் எழுதப்பட்டிருத்தலைக் காண லாம். இவைகளுக்குச் சிலாசாசனம் என்று பெயர். இதல்லாமல் செப்பேடுகளில் வரையப்பட்டிருக்கும் சாசனங்களுமுண்டு. இவைகளுக்கு செப்பு அல் லது தாமிரசாசனம் என்று பெயர். இவ்விரண்டு சாசனங்களுமே முக்கியமானவை. பழைய நாண யங்களின்மீது இருக்கும் எழுத்துக்களையும் சிலர் சிலா சாசனமாக அங்கீகரிப்பார்கள்.

நமது நாட்டின் பழையகாலத்து அரசர்கள் பெரும்பாலும் கிரகண காலங்களிலும் மற்றும் விசேட காலங்களிலும் பிராமணர் வித்துவான்கள் முதலானவர்களுக்கும் கோயிலுக்கும் பூமி, நகை, நாணயம் சில சுதந்தரம் முதலியவற்றை வழங்கி வந்தார்கள். அவ்வாறு வழங்குங் காலங்களில் தானம் வாங்கினவர்களுக்கு ஓர் ஆதாரம் வேண் டும். அதற்காகச் சிலையில் எழுதப்பட்ட உத்தரவு, செப்புத் தகட்டில் எழுதப்பட்ட உத்தரவு ஆகிய இவைகளைக் கொடுத்து வந்தார்கள். இவைகளுக் குத்தான் சாசனங்கள் என்று பெயர்.

ஆலயங்களில் விசேடமாகச் சிலா சாசனங்கள் இருப்பதேனென்றால், கோயிலுக்குத்தான் விசேடமாகப் பழையகாலத்து அரசர்கள் தருமங்கள் செய்திருக்கிறார்கள். அல்லாமலும் கோயிலில் ஒருவித உத்தரவை வரைந்தால் மற்றக்காலங்களில் எவனாவது ஒரு சத்துருவாகிய அரசன் அந்த நாட்டைக் கைப்பற்றியபோதிலும் கோயிலி லிருக்கும் உத்தரவை அழிக்கமாட்டான். இது தாம் செய்யும் தருமம் எப்போதும் நிலைநிற்குமென்று அவர்கள் கொண்ட கருத்தாகவும் இருக்கலாம். அவர்கள் கொண்ட கருத்துப்படியே நமது ஆலயங்கள் அரசர் கையில் அதிக அவத்தையுறாது நமக்கு அக்காலத்திய சாசனங்களைப் படிக்கும் பாக்கியத்தையும் ஒருவாறு அளிக்கின்றது.

பழைய சாசனங்களை நாம் படிப்பதனால் சரித்திரங்களுக்கு வேண்டிய அநேகவித ஆதாரங்கள் ஏற்படும். அக்காலத்தில் அரசாண்ட அரசர்கள், அவர்கள் காலம், அவர்கள் பரம்பரை, அவர்கள் எவ்விதமாக ஆண்டுவந்தார்கள், குடிகளை எப்படிப் பரிபாலித்தனர், எவர்களிடமிருந்து எவ்விதமாய்க் கடமைகளையும் கப்பங்களையும் வாங்கி வந்தார்கள், அவர்கள் அணிந்த நகைகள் யாவை, உடுத்த உடைகள் யாவை, கல்விப்பயிற்சியில் எவ்விதத் தேர்ச்சியடைந்திருந்தார்கள், யாரவர்களுடைய பந்துக்கள், யாரவர்களுடைய சத்துருக்கள் முதலியனவும் பிறவுமாகிய சரித்திர அறிவை நாம் பெறலாம்.

இவ்வறிவு மனோராச்சியமான ஊகங்களல்ல; ஆதாரம் முற்றிலும் பொருந்திய முடிவுகள். ஆகையால் சாசனங்கள் நமது நாட்டுச் சரித்திரத்தை நிலை நிறுத்த முக்கிய ஆதாரங்களாகும். இவைகளில் நாள் நட்சத்திரம் முதலியவைகள் சரியாய்க் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைக் கணக்கிட்டுப் பார்த்தால் வினடிமுதல் சரியா யிருக்கும்.

தலபுராணங்கள் பெரும்பாலும் அற்ப விடயங்களை வெகுவாய் வருணித்துக் கூறுகின்றமையின் அவை சரித்திர சம்பந்தமான விடயங்களுக்கு ஆதாரமாகும் தகுதிப்பாட்டைக் கொண்டிருக்கவில்லை. சாசனங்களோ அப்படியல்ல; அவை உள்ளதை உள்ளபடி உரைக்கும் உண்மையான ஆதாரங்களாதலால் சரித்திர ஆராய்ச்சியாளர் சாசனங்களை முதன்மையாக அங்கீகரிக்கின்றார்கள்.

நமது நாட்டி லேற்பட்ட கணக்குகளை நாம் பார்த்தால் இக்காலத்தில் பின்னங்கள் என்று பெயர் வழங்கும் கணக்கு இவ்வளவுதானா; நமது முன்னோர் கண்ட கணக்கின் ஒரு தூசுதானே என்று ஏற்படும். இதை ஒரு சாசனத்திலிருந்து எடுத்துக் காட்டுவோம்.

"இந்நாட்டுச் செம்புறை கண்டத்து சிறு செம்புறை அளந்தபடி நிலம் ஆறரையே மும்மாவரை முந்திரிகைக்கீழ் அரையே நான்குமா மூக்காணி அரைக்காணி முந்திரிகையிலும் ஊரிருக்கை

யும் கொட்டகாரமும் மாதேவரிருந்திடலுங், கண்ணன்வாய் நின்றும் இவ்வூர் நிலத்தாறே குறங்கறுத்துப் புறவூர்க்கு நீர்பாயும் வாய்க்காலும் வெள்ளான் சுடுகாடும் கண்மான சேரியும் பறைச்சேரியும் பறைச்சுடுகாடும் ஆக இறையிலி நீங்குநிலம் ஏழு மாகாணிக்கீழ் எழு மா வரைக்காணி முந்திரிகைக் கீழ் நான்குமா நீக்கி நிலம் ஆறே அறுமாகாணி முந்திரிகைக்கீழ் முக்காலே, ஒரு மாவினல் இறை கட்டின காணிக்கடன் ராசகேசரியோ டொக்கும், ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளக்கக்கடவ நெல்லு அறுநூற் றெருபத் திருகலனே பதக்கு"

இந்தச் சாசனத்தால் சிறு செம்புறை என்ற ஊரில் இவ்வளவு நிலம் மொத்தமென்றும் அதில் வரியில்லாத நிலம் இவ்வளவுபோக வரியுள்ள நிலம் இவ்வளவென்றும் அந்த நிலத்திற்கு வரியாக உள்ள தானியம் இவ்வளவென்றும் சரியாகத் தெரிகின்றது.

சாசனங்கள் நமது நாட்டிற் பெரும்பாலும் தமிழ் கிரந்தம் தெலுங்கு மலையாளம் தேவநாகரம் முதலிய எழுத்துகளில் எழுதப்பட்டிருக்கின்றன. நாம் இப்பொழுது எப்படி எழுதுகிறோமோ அப்படியேதான் நமது முன்னோர்களும் எழுதியிருக்கிறார்கள். ஆனால் சாசனங்களின் எழுத்துகள் பழைய எழுத்துக்கள். நாளடைவில் எழுத்துகள் சிறிது சிறிதாக மாறுகின்றன என்று சாசன பரிசோதகர்கள் அறிவிக்கின்றனர். தமிழ்

எழுத்துக்களின் பழைய வடிவம் வட்டவடிவினது. ஆகவே அவை வட்டெழுத்துக்கள் எனப் பெயர் பெற்றன. வட்டெழுத்துக்களே வடிவில் மாற்ற மடைந்து இன்றையத் தமிழ் எழுத்துகளின் வடிவை அடைந்திருக்கின்றன.

# 5 தமிழ்ச் சங்கம்

வடக்குத் திருவேங்கடமலையும் தெற்குக் கன்னியா குமரியும் கிழக்கும் மேற்கும் கடலுமாகிய எல்லை குட்பட்ட நிலம் தமிழ்நாடு எனப்படும். தமிழ் நாடு சேரசோழ பாண்டியர் என்னும் மூவேந்தர்களாற் புரக்கப்பட்டு வந்தது. ஒரு காலத்திற் சேரநாட்டிற் றூய தமிழ் வழங்கிற்றாயினும், இன்று, அங்கு தமி ழின் உறழ்ச்சி பிறழ்ச்சிகளாற் றோன்றிய மலை யாளமொழி வழங்குகின்றது.

மூவேந்தரும் தமிழைத் தங்கண்ணெனப் போற்றி வளர்த்தனர்; தமிழ்ப் புலவரைச் சன்மா னித்தனர்; தமிழ் எங்கும் பரிமளித்தது. மக்களி டையே தமிழ் கற்பதிற்குன்றாத ஆர்வங் கிளர்ந்தது.

மூவேந்தர் நாடுகளிலும் தமிழ் செழித்து வளர்ந்த போதும் பாண்டியர் இராசதானியாகிய மதுரை நகரே தமிழ்க் கல்விக்கு மத்தியகளமாக விளங்கிற்று. பாண்டிய மன்னர் தமிழை வளர்ப்ப தில் ஏனையரிலும் மிக்க கருத்துச் கொண்டிருந்தனர். பாண்டிய மன்னனொருவன் தனது தலைநகரில் புலவர் அவை ஒன்று கூட்டி நிறுவினான். தமிழ் நாட்டில் ஆங்காங்கு வதிந்த செந்நாப் புலவர்கள் அவ்வவையி னுறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட் டனர். பாண்டியர் நிறுவிய கல்விக் கழகம் அரசாங்

கத்தோடு இணைக்கப்பட்டிருந்தது. ஆகவே, அக் கழகம் பாண்டியர் ஆட்சியில் நீண்டகாலம் நடை பெறுவதாயிற்று. அது இற்றைஞான்று அர சாட்சியினர் நிறுவியுள்ள வித்தியாபகுதி போன்ற தொன்றேயாகும்.

நாட்டுக் குழப்பம், யுத்தம், கடல் கோள் போன்ற காரணங்களால் அக்கழகம் இடை யிடையே ஒழிவுற்றது. இச்சங்கம் இடையே இரு முறை ஒழிவுற்றதாக நூல்கள் கூறுகின்றன. ஒவ் வொரு ஒழிவுக்கு முன்னும் பின்னும் தொடங்கி நடைபெற்ற தமிழ்க் கழகங்கள் முறையே முதல் இடைகடைச் சங்கங்கள் என்னும் பெயர் பெற்றன.

தமிழ்க் கழகம் இடைஇடையே நடவாதொழிந் தமைக்குக் காரணம் கடல்கோள் என்று சொல்லப் படுகின்றது. பழைய உரைகள் கூறுகின்றபடி, கன்னியாகுமரியின் தொடர்பாகத் தென் கிழக்கே பெரிய நிலப் பரப்பிருந்தது. அங்கு தமிழ் பேசப் பட்டது. காலத்துக்குக் காலம் தோன்றிய கடற் பெருக்குகளால் அந்நிலப் பரப்பு நீருள் மறைந்து போயிற்று.

இறையனார் அகப்பொருள் அல்லது இறைய னார் களவியல் என்னும் ஒரு பழந் தமிழ் நூலுள் ளது. இதற்கு உரை நக்கீரனாராற் செய்யப்பட்டி ருக்கின்றது. அவ்வுரை ஏட்டில் எழுதப்படாது நீண்டகாலம் செவி வழக்கில் வந்திருக்கின்றது.

அது, கி. பி. ஆறும் அல்லது ஏழாம் நூற்றாண்டில் நீலகண்டனார் என்னும் ஒரு ஆசிரியரால் ஏட்டில் எழுதி வைக்கப்பட்டது. அந்நூலில் மூச்சங்க வரலாறு முதன்முதற் கூறப்பட்டிருக்கின்றது. அவ்வுரையின்படி, அகத்தியர் என்னும் தமிழ் முனிவர் ஒருவர் தமிழ்ச் சங்கத்துக்குத் தலைவராக வீற்றிருந்தார். அகத்தியர் என்பார் ஆரிய முனிவரோ தமிழ் முனிவரோவென்று வாதங்கள் நிகழ்வதுண்டு. தமிழர்களது தொல்பதி இந்திய நாடு முழுமையும் என்றும் இன்றும் வங்காளம் முதலிய வடநாடுகளில் வாழ்வோரா திராவிட மக்களே என்றும் சரித்திரங்களிற் படிக்கின்றோம். ஆகவே, அகத்தியர் தமிழ் முனிவரல்லர் என்று கூறுவதற்கேற்ற ஆதாரமொன்றும் பெற்றிலேம்.

தமிழ்ச் சங்கம் பதினாயிரம் வருடங்கள்வரையில் நடைபெற்றதெனப் பழைய உரைகள் கூறுகின்றன. இக் காலக்கணக்கை இற்றைநாள் ஆராய்ச்சி அறிஞர் ஐயுறுவர். உலகின் பற்பல பாகங்களிலிருந்து பழைய சரித்திரங்களை எழுதிய ஆசிரியர்கள் உண்மை வரலாறுகளை வருணித்தும் மிகைப்படுத்தியும் சாற்றியிருத்தலைக் காணலாம். அவ்வகையினதே இவ்வுரை எனக் கொள்வதினால் நேரும் இழுக்கு யாதும் இன்று.

தமிழ்க் கழகம் கூடுவதற்கெனப் பாண்டியரது தலைநகராகிய மதுரையிற் றனிமண்டபமொன்று அமைக்கப்பட்டிருந்தது. அழகிய அம்

மண்டபத்தே புலவர்கள் வீற்றிருப்பதற்கு கன்மாப் பலகையாலாய ஆசனங்கள் இடப்பட்டன. கடைச் சங்கத்தில் ஒரே முறையில் நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்தார்கள் என அறியப்படுகின்றமையின் ஒவ்வொரு கழகத்திலும் உறுப்பினரின் எண் மட்டுப்படுத்தப் பட்டிருந்தது என அறிகின்றோம்.

புதிதாக நூல் செய்வோரும் பாடல் புனைவோரும் மதுரைச் சங்கத்தே சென்று அவற்றைச் சங்கப் புலவர்கள் முன் படித்துக் காட்டி அவர்களின் அங்கீகாரம் பெறுவர். இவ்வாறு நூல்களையும் பாடல்களையும் அரங்கேற்றுமிடத்துச் சங்கப் புலவர்கள் இடையிடையே பல கடாக்களை எழுப்புவது இயல்பு.

அரங்கேற்றப்பட்ட பாடல்களும் நூல்களும் சங்கத்தே படி எடுத்து வைக்கப்பட்டன. இவ்வாறு சேகரித்து வைக்கப்பட்டிருந்த பாடல்களே பிற்காலத்தில் *எட்டுத் தொகை பத்துப்பாட்டு என்னும் நூல்களாகத் தொகுக்கப்பட்டன. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களும் சங்க நூல்கள் எனப்படுகின்றனவாயினும் அவற்றுட் பெரும்பாலான பிற்காலத்திற் செய்யப்பட்டன என்று விளங்குகின்றது.

இறையனர் அகப்பொருள் உரை யாப்பருங்கல விருத்தி, சிலப்பதிகார உரை முதலியவற்

* எட்டுத் தொகை: அகம், புறம், நற்றிணை குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல், பதிற்றுப்பத்து.

றில் சுட்டப்பட்டுள்ள அநேக இலக்கண இலக்கிய நூல்கள் இன்று கிடைக்கவில்லை. தொல்காப்பியம் இடைச் சங்க காலத்திற் செய்யப்பட்டதெனச் சொல்லப்படுகின்றது.

முற்காலத்தில் நூல்கள் பனை ஓலைகளில் எழுதி வைக்கப்பட்டன. ஒரு நூலில் ஒன்று அல்லது சில பிரதிகளே எழுதப்பட்டன. அவ்வேடுகளைப் பிற் காலங்களிற் பயில்வோர் படி எடுத்தெழுதி போற் றிப் பாதுகாவாத விடத்து அவை காலத்தில் இறந்து போதல் புதுமையன்று. இவ்வாறு எண்ணி றந்த தமிழ் நூல்கள் இறந்துபட்டன.

சாதிச் சண்டை சமயச் சண்டை கடல்கோள் போன்ற சம்பவங்கள் நூல்கள் அழிந்து போவதற் குரிய காரணங்களாகும்.

தமிழ்ச் சங்கம் கி. பி. முதலாம் நூற்றாண்டின் இறுதிக் காலம் வரையில் நின்றுபோயிற்று. சாதிச் சண்டைகளும் சமயச் சண்டைகளும் அதிகரித்த திறைப் போலும் பிற்காலத்துப் பாண்டியர் தமிழ்ச் சங்கத்தைத் தொடர்ந்து நடத்தும் கருத்து இலர் ஆயினர்.

# 6 * சங்ககாலத்துத் தெய்வ வழிபாடு

" ஆலமுங் கடம்பும நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்!
எவ்வயி னோயு நீயே "

(பரிபாடல் 4-67-70)

" ஆலுங் கடம்பும் யாற்றிடைக் குறையும் குன்றும் பிறவுமாகிய அவ்விடங்களைப் பொருந்திய பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் பெயரை யுடையோய்!" என்றமையின் சங்ககாலத்துத் தமிழ்மக்கள் கடவுள் ஒருவனேயென்னும் உண்மையை நன்குணர்ந்தாரென்பது வெளிப்படை. பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் பெயரையுடையோன் ஒருவனேஎன உணர்ந்த அறிஞர் அதனை அகத்தும் புறத்தும் வழிபடல் மேற்கொள்வாராயினர். மதிலும் மண்டபமுமாகி யமைந்த கோயில்கள் இயைவதன் முன்னர்ப் பழந்தமிழர் ஆலமர நீழலிலும் கடம்பமர நீழலிலும் யாற்றிடைக் குறையகத்தும் குன்றத்தின் மிசையும் பிறவிடத்தும் சிலையுரு நிறுத்தியும் அஃதின்றியும் தெய்வத்தை வழிபட்டு வந்தனர்.

---

* சுவாமி விபுலானந்தர் எழுதியது - ஞாயிறு.

“ காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினும் ”
(திருமுருகாற்றுப்படை (223–226)

என்பதனுலும்,

“ ஆலமர் செல்வன்,” “ கடம்பமர் காளை ” என்பவற்ருலும் இயற்கை வனப்பு எவ்வெவ்விடத் துளதோ அவ்வவ்விடத்திலெல்லாம் தமிழ்மக்கள் தெய்வத்தை முன்னிட்டு வழிபாடியற்றின ரென்பது அறியக் கிடக்கின்றது.

இயற்கையினமைந்த வனப்புப் பொருள்களுள் அறிவெல்லையா லறியப்படாத புகழுடனே பொலிந்து நிலவெல்லையைத்தாங்கிய நிலைமை நீங்காத தொல்லிசைப் புலவர் ஆராய்ந்துரைத்த “ நெடிய குன்றங்கள் ” பலவகைச் சிறப்புடையன. மலரையுடைய அகன்ற தடாகங்களும் மேகங்கள் படியுஞ் சிகரங்களும் பொருந்தி நிலத்திலுள்ளாரது பசிவெம்மையை யகற்றும் நீர்மையவாகிய குலவரைகள் சிலவுள. அவை தம்முள் சங்கமிருந்து தமிழாராய்ந்த கூடலம்பதிக்கு அணித்தாகிய பரங்குன்றமும் இருங்குன்றமும் கழிபெருஞ் சிறப்புடையன.

பரங்குன்றம் முருகக்கடவுள் திருக்கோயில் கொண் டெழுந்தருளி யிருப்பது, திருமாலிருஞ் சோலைமலையென்னும் இருங்குன்றம் மாயோனையும்

வாலியோனையும் தாங்கி நிற்பது; இவ்விருகுன்ற மும் இவற்றின்மீது எழுந்தருளிய தெய்வங்களும் தமிழ்ப்புலவரால் உவந்து பாடப்பட்டன. பரங் குன்றத்தின் அடியின்கண் மாலைக டோறும் பொருந்தியிருத்தலைத் தேவருலகத் துறைதலினும் சிறந்ததாகக்கொண்ட தமிழ்ப்புலவர்,

"மாலை மாலை யடியுறை யியைநர்
மேலோ ருறையுளும் வேண்டுநர் யாஅர்"

(பரிபாடல் 17-27-6) எனக் கூறினர்.

அரிதிற்பெறு துறக்கத்தை எளிதிற் பெறுத லுரிமையான் "மாலிருங் குன்றத்தை எல்லாருங் கேட்க ஏத்தக்கடவேம்" என இருங்குன்றத்தின் சீர் கூறப்பட்டது. யாண்டும் நிறைந்த அருவடி வாகி யமைந்த பிறவா யாக்கைப் பெரியோனும், பரங்குன்றமர்ந்த அறுமுகச் செவ்வேளும், இருங் குன்றமர்ந்த மாயோனும் வாலியோனும் ஞாலங் காக்கும் கடவுளராகக் கருதப்பட்டனர்.

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு
மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்"

(சிலப்பதிகாரம் 5-68-72)

"நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக"

(மணிமேகலை 1-54-55)

பிறவா யாக்கைப் பெரியோனாகிய இறைவனே யாவராலும் முதல்வனாகக் கருதப்பட்டனன். குறிஞ்சிநிலத்துறைவோர் பூவும் புகையுங்கொண்டு முருகனை யேத்தி வழிபட்டனர். முல்லைநிலத்துறையுங் கோவலர் குரவைக்கூத்தாடி மாயோனையும் வாலியோனையும் வழிபட்டனர்.

மருதநிலத்துத் தெய்வமாகிய இந்திரனும், நெய்தல் நிலத்துத் தெய்வமாகிய வருணனும், பாலைத் தெய்வமாகிய கொற்றவையும் அவ்வந்நிலத்து மக்களால் வழிபாடு செய்யப்பெற்ற வரலாற்றினைச் சங்கத்தமிழ் நூல்களிற் பரக்கக் காணலாகும். மூத்தபிள்ளையாராகிய விநாயகக்கடவுளது வழிபாடு சங்கநூல்களுட் பயின்று வாராமை அறிஞரால் ஆராயற் பாலதொன்றாகும். 24-11-43

# 7 பழம்பொருள் ஆராய்ச்சி I.

பூமியின் கீழும் மேலும் உள்ள பழம் பொருள்களைக் கண்டுபிடித்து அவற்றின் காலங்களை அறிந்து கூறுவது பழம்பொருள் ஆராய்ச்சியின் இலக்காகும். பூமியிற் காலத்துக்குக் காலம் பல வேறு வகையான உயிர்கள் வாழ்ந்திருக்கின்றன. பூமியின் கீழ் பிராணிகளின் எலும்புகளும் பற்களும் கண்டெடுக்கப்பட்டு அவற்றின் காலங்கள் ஆராயப் பட்டிருக்கின்றன.

மனிதன் சரித்திர காலத்திற்கு அப்பாற் பட்டவன். ஆகவே, அவன் உபயோகித்த பொருள்களைக்கொண்டே அவனது சரித்திரத்தை அறிய வேண்டி யிருக்கின்றது. பழம்பொருள் ஆராய்ச்சி நில நூலுக்கும் சரித்திரத்துக்கும் இடைப்பட்டது. இக்கலை பழம்பொருள்களைக்கொண்டு மனிதனின் சரித்திரத்தைக் கூறுவதா யிருக்கின்றது.

பழங்காலக் கல முத்திரைகள், மட்பாணடங்கள் ஆயுதங்கள், சித்திர எழுத்துக்கள், எழுத்துச் சாசனங்கள் முதலியன இவ்வாராய்ச்சிக்குக் கூடிய விளக்க மளிக்கின்றன.

வருங்காலத்தை அறிந்துகொள்ளும் மனிதனது இயல்பான விருப்பம், சோதிடம், குறி சொல்லுதல், சகுனம் பார்த்தல் போன்ற அறிவை

உண்டுபண்ணிற்று. இதுபோலவே மனிதன் தனது பழங்கால இரகசியங்களை அறிய விரும்புவது இயல்பு. திருந்திய ஒவ்வொரு சாதியினரின் இலக்கியங்களிலும் பழஞ் சரித்திர ஆராய்ச்சிக்குப் பயன்படும் விடயங்கள் காணப்படுகின்றன.

பழம் பொருள் ஆராய்ச்சி நில நூல் ஆராய்ச்சியுடன் சேர்ந்து மனிதனின் பழமையை விளக்குகின்றது. இவ் வாராய்ச்சியினால் மனிதனின் ஆரம்ப காலம் முதல் எழுத்துச் சாசனங்கள் கிடைக்கும் காலம் வரையிலும் சரித்திரம் அறியப் படுகின்றது. எழுதப்பட்ட சரித்திரங்களுக்கு முற்பட்ட ஆதாரங்களைக் கொண்டு மனித சமூகத்தின் வரலாற்றைக் கூறுதல் ஒரு கலையாக வளர்ச்சியடைந்து வருகின்றது.

நில நூலார் எழுத்துச் சாசனங்களிற் கவனஞ் செலுத்துவதில்லை; பூமியின் ஒன்றன்பின் ஒன்றாக உள்ள சரித்திரங்களை ஆராய்ந்து, மனித உற்பத்திக்கு முன் நிலவுலகில் வாழ்ந்த பலவகைப் பிராணிகளைப் பற்றிக் கூறுகின்றனர். நில நூல் ஆராய்ச்சி மனிதன் தோன்றிய காலத்தில் முடிவடைந்து விடப் பழம் பொருள் ஆராய்ச்சியைக் கொண்டு அவனது சரித்திரத்தை அறியவேண்டியிருக்கின்றது.

பழம் பொருள் ஆராய்ச்சியாளர்—கற்காலம், வெண்கல காலம், இரும்புக் காலம் எனக் காலத்தை

மூன்றாகப் பிரிப்பர். மனிதன் அவ் வக்காலங்களில் தனது உபயோகத்துக்குரிய ஆயுதங்களை அவ்வப் பொருள்களால் உண்டாக்கினமையின் அக்காலங் களுக்கு இப்பெயர்கள் இடப்பட்டன. கற் காலத் திற் சீவித்த மக்கள் தங்கள் உபயோகத்துக்கு வேண்டிய பொருள்களைக் கல்லுக் கொம்பு என்பு என்பவற்றாற் செய்தனர். வெண்கல கால மக்கள் ஆரம்பத்தில் செம்பினால் ஆயுதங்களைச் செய்தனர். பின்பு செம்புடன் தகரத்தைக் கலந்து வெண் கலத்தை உண்டாக்க அறிந்தனர். அதன்மேல் ஆயுதங்கள் வெண்கலத்தாற் செய்யப்பட்டன. இரும்புக் காலம், மனிதன் ஆயுதஞ் செய்யும் வித் தையில் முதிர்ச்சி யடைந்த பருவத்தை அறிவிக் கின்றது. இட வசதி மனிதனின் கலை வளர்ச்சிக்கு உதவி யளிக்கின்றது. ஆபிரிக்காவின் சில பாகங் களில் மிக முற்பட்ட காலத்திலேயே மக்கள் இரும் பினால் வேலை செய்தார்கள் என்று அறியப்படு கின்றது.

கல் வெண்கலம் இரும்பு என்னுங் காலங்கள் எழுத்துப் பிரமாணங்கள் காணப்படாத காலத் தைக் குறிப்பன. உலகின் எல்லாப் பாகங்களி லும் ஒரே காலத்தில் இம் மூன்று காலங்களும் இருந் திருக்கவில்லை. காட்டு மிராண்டிச் சாதியார் சிலர் இன்றும் கற்கால வாழ்க்கையில் இருக்கின்றனர். அவுஸ்திரேலியரையும் நியூ சீலந்திலுள்ள மயோரிய ரையும், பொலி நீசிய தீவிலுள்ள கருபியரையும்

(Curibs) ஐரோப்பியர் முதற் கண்டபோது, அம் மக்கள் உலோகத்தைப் பற்றி அறியாதிருந்தனர். அவர்கள் மரம் கொம்பு கடற் பிராணிகளின் ஓடு மிருக எலும்பு முதலியவற்றால் ஆயுதங்கள் செய்து உபயோகித்தனர். பதினாறும் நூற்றாண்டில் இஸ்பானியர் அமெரிக்காவிற்குச் சென்ற ஞான்று மெக்சிக்கரும் பெருவியரும் செம்பிலும் பொன்னிலும் வேலை செய்ய அறிந்திருந்தனர். ஆனால், அவர்கள் இரும்பைப்பற்றி அறிந்திருக்கவில்லை. அவர்கள் எரிமலையின் ஓரங்களிற் கிடைக்கும் தீத்தட்டிக் கற்களால் ஆயுதங்களைச் செய்தனர்.

சில நூலார் பூமியின் வயசை ஐந்து உகங்களாக வகுத்திருக்கின்றனர். ஐந்தாவது உகத்திலே இற்றைக்கு ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முன் மக்கள் உற்பத்தியாயினர் என்று இக்கால விஞ்ஞானிகள் கூறுகின்றனர். ஐந்தாம் உகத்தில் வாழ்ந்த மிருகங்களின் என்புகளோடு மனித எலும்புகளும், மனிதன் உபயோகித்த பொருள்களும் காணப்படுகின்றன. அக்காலத்து வாழ்ந்த விலங்குகள் நீண்ட உரோமமுடைய யானை, சடை வளர்ந்த காண்டாமிருகம் முதலியன. இம் மண்ணகத்து ஏற்பட்ட வெப்ப தட்ப மாறுதல் காரணமாக அவ் விலங்குகள் அடி அழிந்தனவாதல் கூடும்.

**பழைய கற்காலம் :** பழைய கற்கால மனிதர் குகைகளில் வசித்தனர். அக்காலத்தில் சடை

யானை, சுருண்ட உரோமம் வளர்ந்த காண்டா மிருகம், நீண்ட இரண்டு பற்களுடைய புலி முதலிய விலங்குகள் வாழ்ந்தன. இங்கிலாந்து, பிரான்ஸ் பெல்சியம் முதலிய தேயங்களில் அக்கால மனிதர் வாழ்ந்த மலைக் குகைகள் கண்டு பிடிக்கப்பட்டிருக் கின்றன. அவைகளில் காண்டாமிருகம், யானை, குதிரை, கரடி, நாய்ச் சிங்கம், துருவமான் ஏழடி உயரமுள்ள 'ஐரிஸ் எல்க்' என்னும் மான் முதலிய விலங்குகளின் என்பு கொம்பு முதலியனவும் மனி தன் தீத் தட்டிக் கற்களாற் செய்த ஆயுதங்களுங் காணப்பட்டன. குகைகளில் மக்கள் வாழ்ந்தனர் என்பதற்கு ஆயுதங்கள் ஆதாரமளிக்கின்றன. தீத்தட்டிக் கற்களைச் செதுக்கிய உடைவுகளும், கல் ஈட்டி முனைகளும், கல் என்பு ஊசிகளும் காணப்பட்டமையின் அவை அவ்விடத்தே வைத் துச் செய்யப்பட்டனவென்று அனுமானித்தல் கூடும். ஆறிடு மேடுகளிலுள்ள பருக்கைக் கற்களி னிடையே, ஈட்டித் தலை உளி முதலிய குகைகளிற் காணப்படாத பெரிய பழங் கற்கால ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டன.

அக்கால மனிதர் தீத்தட்டிக் கல் என்பு மிரு கக் கொம்பு என்பவற்றால் ஆயுதங்களைச் செய்தது மல்லாமல் அழகிய சித்திர வேலைகளையும் செய்திருக் கின்றனர். அவர்கள் தீட்டிய சித்திரங்களில் தனி மிருகமும், மிருகக் கூட்டமும், சடையானை, துருவ மான், குதிரை, மாடு, மீன், பலவகைப் பூக்கள்,

ஆபரண வகைகள், பெரும்படியாக வரைந்த மனித உருவங்கள் முதலியனவுங் காணப்படுகின்றன. சில ஓவியங்கள் திறமையாகக் கீறப்பட்டிருக்கின்றன. சடையானை பலமுறை முயன்று உயிர் விலங்குகளைப் போலவே கீறப்பட்டிருக்கின்றது. யானைத் தந்தமும் மிருகக்கொம்பும், எலும்பும் சித்திரம் வரைதற்கு உபயோகிக்கப்பட் டிருக்கின்றன. இச் சித்திரங்களைக் கொண்டு பழைய கற்காலக் குகை வாசிகள், பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த சாமானிய பிரான்சுக்காரனின் விவேகத்துக்குக் குறைந்தவரல்லர் என்று அறியலாம்.

**புதிய கற்காலம்**: இது அழுத்தமான கல்லாயுதஞ் செய்யப்பட்ட காலமாகும். சுவிற்சலாந்திலுள்ள வாவிகளில் வீடு அமைத்து வாழ்ந்த மக்களின் இல்லங்களிலும் ஐஸ்லாந்து, இஸ்கொத்திலாந்து தென்மார்க் முதலிய தேசங்களிலும் இவ்வகையான ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டன. அவை மிகப் பழையகாலத்திற் செய்யப்பட் டிருக்கின்றன. ஆயினும், அவை பிற்காலப் பொருள்களின் வடிவுடையனவா யிருக்கின்றன. சரித்திர காலம் ஆரம்பிப்பதன்முன் ஐரோப்பா தேச மக்கள் முரடான ஈமத்தாழிகளையும் உடம்பை அலங்கரிக்கும் ஆபரணங்களையும் செய்ய அறிந்திருந்தனர். இரண்டு நீண்ட கற்காலங்களிலும் செய்யப்பட்ட பல ஆயுதங்கள் சேகரிக்கப்பட்டுக் காட்சிச் சாலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின்

வகைகள் நூற்றுக்கணக்காக இருக்கின்றன. அவை கோடரி, உளி, சுரண்டி, தட்டு, குடையும் கருவி, கைக்கோடரி, ஈட்டித்தலை, அம்புத்தலை, சிறுசம்மட்டி, சம்மட்டி முதலியனவும், பானை சட்டிகளும் ஆபரணவகைகளுமாம். இவற்றை உருவப்படுத்தும் அறிவை அம்மக்கள் எவ்வாறு பெற்றார்கள் என்பது அறிந்துகொள்ள முடியவில்லை. சில பொருள்கள் மிகவும் புத்தி நுட்பத்தோடு செய்யப்பட்டிருக்கின்றன. சில, பழைய கற்காலப் பொருள்கள்போல முரடாகச் செய்யப்பட்டிருக்கின்றன. முன் முரடான பொருள்களையும் பின் நன்றாகச் செய்யய்பட்ட பொருள்களையும் முறையாக வைத்து அவை செய்யப்பட்ட கால ஒழுங்கை அறிந்து கொள்ளலாம்.

மனிதர் காட்டு மிராண்டிகளாய் வாழ்ந்த காலத்தில் கட்டிடம் அமைப்பதற்கு வேண்டிய திறமையைப் பெற்றிருக்கவில்லை. மக்கள் எல்லாப் பாகங்களிலும் பழைய சம்பவங்களை ஞாபகப்படுத்துவதற்குக் கற்களை நாட்டுவது வழக்கமாயிருந்தது. இவ்வகை நிகழ்ச்சி விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டிற் சொல்லப்படுகின்றது. இந்தியநாட்டிலும் இவ்வழக்கு இருந்தது. வெற்றியை உணர்த்தவும் எல்லையைக் குறிக்கவும், பிரமாணங்கள் சிலவற்றைப் பிரசைகளுக்கு விளம்பரஞ் செய்யவும் கற்கள் நிறுத்தப்பட்டன. இவ்வகையான கல் ஒன்று இன்றும் பொனீசிய நாட்

டில் இருக்கின்றது. கற்களை நடும் வழக்கம் கற்களை நாட்டிச் செய்யும் கட்டிடங்களாக மாறினது. இரண்டு உயர்ந்த கற்களை நாட்டிமேலே ஒரு பெருங் கல்லைவைத்துச் செய்யப்பட்ட பழைய கட்டிடங்கள் இங்கிலாந்திற் காணப்படுகின்றன.

வெட்டாத கற்களின் வடிவைப் பின்பற்றியே சதுரத் தூண்கள் நடப்பட்டன. பிரேதங்களைப் புதைத்து மேலே கற்கள் குவிக்கும் முறையைப் பின்பற்றி எகிப்திய 'பிரமிட்டுகள்' கட்டப்பட்டிருக் கின்றன.

கல்லினால் திறமையாகச் செய்யப்பட்ட கோடாரி, சம்மட்டி வட்டில் பாத்திரவகைகள் முதலியன, கற்காலத்தில் முடிவாக அடையக் கூடிய திருத்த்தைக் காண்பிக்கின்றன. குகை களிலும் உலோகம் அரிக்கும் குழிகளிலும், பிரே தக் கிடங்குகளிலும் இருந்து எடுக்கப்பட்ட மனித சின்னங்களுக்குரிய மக்கள், சரித்திரகாலத்தில் ஐரோப்பாவிற் காணப்பட்ட மக்களில் வேறுபட்ட வர்கள் என்று பழம்பொருள் ஆராய்ச்சிக்காரர் கூறுகின்றனர். சரித்திரகால ஆரம்பத்தில் ஐரோப் பிய மக்கள் மிலேச்சத்தன்மையில் இருந்தனர். உலோகம் கண்டுபிடிக்கப்பட்டது முதல் அவர்கள் மிலேச்சத்தன்மையில் இருந்ததுவரையிலும் நன்றாக ஆராய்ந்து கூறமுடியும்.

---

# 8 பழம்பொருள் ஆராய்ச்சி—II

## உலோககாலம்

ஆதியிற் கண்டு பிடிக்கப்பட்ட உலோகம் பொன்ளுக விருக்கலாம். பின்பு செம்பும் தகரமும் கண்டு பிடிக்கப்பட்டன. செம்போடு தகரத்தைக் கலந்து வெண்கலமாக்கும் முறை பின்பு அறியப் பட்டது. வெண்கலத்திலும் செம்பிலும் வேலை செய்ய ஆரம்பமானபோது பொற்கொல்லரின் திறமை அதிகரித்தது. அக்காலத்திற் செய்யப் பட்ட மாலைகளும் ஆபரணங்களும் அரச முத்திரை களும் பலவாகவும் அழகுடையனவாகவும் காணப் படுகின்றன; பானை சட்டிகள் அழகிய வேலைப்பா டுடையனவா யிருக்கின்றன.

செம்பாயுதங்கள் அமரிக்க செவ்விந்தியரால் நீண்டகாலம் உபயோகிக்கப்பட்டன. பிரித் தானிய தீவுகள் தென்மார்க் முதலிய தேசங் களிற் கண்டெடுக்கப்பட்ட வெண்கல ஆயுதங்கள் எகிப்திய பினீசிய நாகரிகம் அந்நாடுகளில் பரவி யிருந்தமையை உணர்த்துகின்றன. உரோமர் இங்கிலாந்தை வெற்றிகொள்வதன்முன் பொனீசி யரும் காதேசியரும் இங்கிலாந்தோடு வர்த்தகஞ் செய்தனர். மெக்சிக்கரும் பெருவியரும் செம்பை யும் தகரத்தையும் கலந்து வெண்கலஞ் செய்யப்

பழகியிருந்தனர். அவ்வாயுதங்களைக் கொண்டே அவர்கள் கல்லில் உருவங்களைச் செதுக்கினர்; ஆலயங்களையும் கல்லறைகளையுங் கட்டினர். எகிப்தி லும் வெண்கல ஆயுதங்களே 'பிரமிட்டுகள்' கட்டும் வேலையில் உபயோகிக்கப்பட்டன.

மெக்சிக்கரதும் பெருவியரதும் மாலைகளும் காப்புகளும் பிற ஆபரணங்களும், அவர்கள் உலோகத்தில் வேலை செய்வதிற் பெற்றிருந்த திறமையை அறிவிக்கின்றன. பொன்னிலும் வெள்ளியிலும் செய்யப்பட்ட பாத்திரங்கள், வெள்ளியிற் செய்து அழுத்தஞ் செய்யப்பட்ட முகம்பார்க்கும் கண்ணுடிகள், தராசுகள், வெள்ளியிலும் வெங்கலத்திலும் செய்யப்பட்ட மணிகள் முதலியன அவர்கள் வெண்கலகாலத்தில் அடைந்திருந்த திருத்தத்தைக் காட்டுகின்றன.

**இரும்புக்காலம் :** இறுதியில் ஏராளமாகக் கிடைக்கும் இரும்பு கண்டுபிடிக்கப்பட்டது. இது உலோகங்களில் வயிரமுடையதாதலின் ஆயுதங்கள் இதனுற் செய்யப்பட்டன. வெண்கலம், ஆபரணங்கள் ஆயுதங்களின் பிடிகள் செய்வதற்கும் வேறு தேவைகளுக்கும் உபயோகப்படுவதாயிற்று. வெண்கலகாலத்திற், கற்களும், கவணில் வைத்தெறியும் கற்களும் உபயோகிக்கப்பட்டன. இரும்பைப்போல எல்லாத் தேவைகளுக்கும் போதுமான வெண்கலம் கிடைக்குமானல் இரும்புக்காலம் அதிகமாற்றம் உண்டுபண்ணியிருக்கமாட்டாது. ஆனல்

போதிய அளவு வெண்கலம் கிடைக்கவில்லை. வெண்கலம் அருமையாகக் கிடைத்ததோடு விலை ஏறப்பெற்றதாயும் இருந்தது. ஆகவே வெண்கல காலம் முழுமையிலும் கற்காலக் கலையே வளர்ச்சி யுற்றது. இரும்பு அதிகம் கிடைத்தபோதும் அதனை உலையில் வைத்து உருக்கிக் கிட்டத்தைப் போக்கிச் சுத்தஞ் செய்வதற்குரிய அனுபவம் பெற நீண்ட காலம் பிடித்தது. இரும்புப் பொருள்கள் கறை யினால் விரைவிற் பழுதடையும் இயல்புடையன. ஆகவே வேலைப்பாடுள்ள பழைய இரும்பாயுதங்கள் கிடைக்கவில்லை.

இரும்புக்காலத்திற் செய்யப்பட்ட பானை சட்டி கள், விலை உயர்ந்த உலோகங்களாற் செய்யப் பட்ட ஆபரணங்கள், வெண்கலப் பொருள்கள் முதலியன அக்காலத்துக்கேற்ற நாகரிகத்தைக் காட்டுகின்றன. மனிதர் படிப்படியாகக் கலைகளில் முன்னேறிவந்து இந்தியா எகிப்து பொனீசியா சுமேரியா முதலிய சரித்திர சம்பந்தமான இடங் களோடு தொடர்பு பெற்றுச் சரித்திர காலத்தை அடைந்திருக்கின்றனர். இதன்மேல் சிலாசாசனம், பழைய இலக்கியம், அரசர் சரித்திரம் என்பவற்றால் சரித்திரம் முடிவடைகின்றது. கல்லிலும் உலோ கங்களிலும் எழுதப்பட்ட சாசனங்கள் சரித்திர ஆராய்ச்சிக்குப் பயன்படுகின்றன.

**சமூக முன்னேற்றம்:** காட்டு வாழ்க்கையிலுள்ள மனிதன் ஒரு தனிமையான பிராணி. யுத்தம் அல்

லது வேட்டையாடுதல் முதலிய காரணங்களுக்காக வன்றி அவன் ஒன்றுசேர்ந்து இருக்க முடியாது. அக் காரணங்களால் அவன் அனுபவம் பெறு கின்றான். இவ்வகையான ஆரம்ப கூட்டுறவு காலத்தில் அவனுக்கு ஆயுதங்கள் அவசியந் தேவைப்படுகின்றன. ஆயுதங்களை அவன் தானு கவே செய்தான்.

மனிதர் உலோகத்தினல் வேலையை இலகு வாக்கக்கூடியனவும், பலவேறு வடிவினவுமாகிய அழகிய ஆயுதங்களைச் செய்யப் பழகியபோது சமூ கத்தில் முன்னேற்றம் உண்டாயிற்று. புதிய பொருள்கள் சில இடங்களில்மாத்திரம் ஓரளவுக் குக் கிடைக்குமாயின் உடனே வியாபாரம் ஆரம் பிக்கின்றது., வியாபாரத்தினற் றொழிற்பிரிவு ஏற் படுவதோடு கூட்டுறவும் ஏற்படுகின்றது. செம்பு அல்லது வெண்கலம் சிறிதளவு கிடைத்தபோது சமூக முன்னேற்றம் கட்டுப்பட்டிருந்தது.

இரும்பில் வேலை செய்ய ஆரம்பிப்பதன்முன் உலோகத்தில் வேலை செய்யும் அனுபவம் அதிகம் வேண்டும். இரும்பில் வேலை செய்வதற்கு மக்க ளின் ஒத்துழைப்பு அதிகம் இருந்திருக்கவேண்டும். அதிகம் கிடைக்கக்கூடியதும் அதிகப் பிரயாசை யுடன் வேலை செய்யவேண்டியதுமாகிய இரும்பில் வேலை செய்வதால் முன்னேற்றம் ஏற்பட்டது. முன்னேற்றம் சாதிகள் தொழில் செய்யும் திறமை யின் அளவாக இருந்தது.

உலகிலுள்ள எல்லா மக்களும் ஒரே வகையான நிலைமையிலிருந்தே படிப்படியாக முன்னேறி வந்திருக்கின்றனர். ஆரம்பகாலத்தில் மனிதர் காட்டுமிராண்டிகளாய் உணவுக்கு அலைந்து திரிந்தனர். அவர்கள் மாமிசம் புசிக்கும் பெரிய விலங்குகளுடன் போராடவேண்டி யிருந்தது. அக்கால மனிதர் வாழ்ந்த குகைகளில் தாவரமுண்ணும் பெரிய விலங்குகளின் எலும்புகளும் கொம்புகளும் காணப்பட்டன. வட அமெரிக்கா நியூசிலந்து நாடுகளிற் காணப்படும் எஸ்கிமோவர் எலும்பினலும் தந்தத்தினலும் கல்லினலும் செய்த புதிய கற்கால ஆயுதங்களையே பத்தொன்பதாம் நூற்றாண்டுவரையும் உபயோகித்திருக்கின்றனர்.

இதற்குப்பின் ஆடுமாடுகளைப் பாதுகாத்தலாகிய நிலைமை ஏற்படுகின்றது. இதனல் மனிதன் சொத்து உடையவனக ஆரம்பித்திருக்கின்ருன். இவ்வகையான வாழ்க்கை மத்திய வலய காலசுவாத்தியமுள்ள புல்வெளி நிலங்களில் ஆரம்பித்தது. பருவகால மாற்றங்களால் இடையர் இடம்விட்டு இடம் அலைந்தனர். அதனல் ஒரு இடத்திற் றங்கியிருந்து கலையை விருத்திசெய்ய அவர்களுக்கு முடியாமற் போயிற்று. ஆகவே கட்டிடம் அமைக்கும் கலை விசேடமாக விருத்தியடையவில்லை. நாடோடி வாழ்க்கையில் அதிகம் ஓய்வு நேரம் உண்டு. அதனல் அனுபவமும் விவேக உணர்ச்சியும் விருத்தியடைந்தன. நாடோடிமக்களே வான சாத்திரத்தைக் கண்டுபிடித்தனர்.

மூன்றாவதாக உழவு தொழில் விருத்தி யடைந்தது. அப்போது உழவரும் நிலத்துக் கதிபதிகளும் ஏற்பட்டனர். ஓரிடத்தில் தங்கி வாழ்ந்தமையின் அவர்கள் வீடுகள் அமைத்தனர். அவர்கள் நில முடையவர்களா யிருந்தனர். முன்னேற்றம் படிப் படியாக விருத்தியடைந்தது.

இந்திய உழவர் கப்பல் கட்டுதல், துன்னுதல், நெசவு செய்தல், பானை சட்டி வனைதல், கட்டிடங்கள் அமைத்தல் முதலிய தொழில்களில் திறமை எய்தினர். ஆடு, மாடு, எருமை, நாய் என்பவற்றையும் வளர்த்தனர். அவர்களின் செல்வம் மாடாக விருந்தது. அவர்களின் நாகரிகம் கற்காலத்திலிருந்து இரும்புக்காலம் வரையில் தொடர்பாக வளர்ச்சி யடைந்திருக்கின்றது. இதற்கு ஆதாரம் அவர்கள் மொழியிற் காணப்படுகின்றது.

நைல் யூபிறுதிஸ் தைகிரஸ் சிந்து கங்கா நதிக் கரைகளில் உழவு தொழில் விருத்தியடைந்தது. மத்தியதரைக் கடலோரங்களிற் பிற்காலத்துப் பெரிய இராச்சியங்கள் ஏற்பட்டன. சரித்திர சம்பந்தமான ஐரோப்பிய நாகரிகம் பிற்காலத்தது.

மனிதர் ஆதியில் சித்திரங்களை எழுத்துக்குப் பதில் வழங்கினர். பின் உச்சரிப்பு முறையான எழுத்துகள் எழுதப்பட்டன. இவ்வகையான எழுத்துகள் எகிப்திய சமாதிகளில் எழுதப்பட்டிருக்கின்றன. சித்திரங்கள் சொற்களை உணர்த்தின. சிந்து

நதி மக்கள் ஒவ்வொரு சொல்லையும் ஒவ்வொரு குறி யிட்டால் உணர்த்தினர். சீனருடைய எழுத்தும் இம் முறையினதே. சித்திர எழுத்துகளையும் பின்தோன் றிய உச்சரிப்பு முறையான எழுத்துகளையுந் தழுவி பொனீசிய கிரேக்க எழுத்துக்கள் ஆக்கப்பட்டன.

கட்டிடம், கட்டிட அமைபபு, மட்பாத்திரஙகள, என்பன சரித்திர சம்பந்தமுடையன. மக்கள், காலத்துக்குக் காலமணிந்த வேறுபட்ட உடைகள், பழக்க வழக்கங்கள் ஆதியனவும் பழம்பொருள் ஆராய்ச்சிக்கு வேண்டியன.

# 9. தொல்காப்பியர் *

தொல்காப்பியர் இடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். தொல்காப்பியரென்பது தொல்காப்பியம் என்னும் நூல் செய்தமையால் இவர்க்கு இடப்பட்ட காரணப்பெயர். இது நன்னூல் செய்த பவணந்தியாரை நன்னூலார் என்பது போன்றதோர் வழக்கு. புலவர்கள் போற்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் இவரது இயற்பெயர் திரண தூமாக்கினி என ஓரிடத்திற் கூறிப்போந்தார். இப்பெயர் யாதோ ஒரு தமிழ்ச் சொல்லின் வடமொழி மொழி பெயர்ப்பாகத் தொனிக்கின்றது. புலத்தியன் என்னும் பெயர் புல்-அக-தியன் எனப் பிரிக்கப்பட்டுத் திரணம்-தூமம்-அக்கினி என மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றதென அறிஞர் சிலர் புகல்கின்றனர். எவ்வாறாயினுமாகுக. இவருக்குத் தொல்காப்பியரென்னும் காரணப் பெயரைவிட இயற்பெயர் ஒன்று உண்டு என்பதை இது விளக்குகின்றது. அப்பெயர்தான் யாதெனத் துணிந்து கூற முடியவில்லை.

இவரது ஊர் பிறப்பு வளர்ப்புக் குலம் ஆதியன அறியப்படாதவற்றுட் சில. இவரது காலம்

* இக் கட்டுரை இக்காலம வழங்குகின்ற தொலகாப்பியர் வரலாறுகளின் ஏற்ற பகுதிகளைச் சேர்த்து எழுதப்பட்டுள்ளது.

கி. மு. 350-க்குப் பிற்பட்டதன்று என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. தொல்காப்பியத்திற் கூறப்படும் சில இலக்கண விதிகளைக்கொண்டு இவ்வாறு இவரது காலம் நிர்ணயிக்கப்படுகின்றது.

தமிழ்மொழிக்கு ஆதியில் இலக்கண நூல் செய்தவர் அகத்தியர் என நம்பப்பட்டு வருகின்றது. அகத்தியரிடத்திற் பன்னிரு மாணவர்கள் கல்வி பயின்றனர். அவருள் தொல்காப்பியர் தலைமை பெற்று விளங்கினர். இவர் தொல்காப்பியம் எனப் பெயரிய இலக்கண நூல் செய்தார். இது முற்காலத்தும் பிற்காலத்தும் தோன்றிய இலக்கண நூல்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்தது. இந்நூல் இடைச்சங்கத்தாராலும் பிற்காலத்தாராலும் ஆதாரமாகக் கொள்ளப்பட்டது. தோன்றிய காலந்தொட்டு இன்றுவரையும் இறவாது நிலவிவரும் தமிழ் இலக்கண நூல் இது ஒன்றேயாகும்.

தொல்காப்பியர் இந்நூலைப் பாண்டியன் **மாகீர்த்தியின்** அவையிலே அதங்கோட்டாசிரியன் முன்னிலையில் அரங்கேற்றினர். தொல்காப்பியருடன் ஒரு சாலை மாணவரா யிருந்து அகத்தியரிடம் கல்விபயின்ற **பனம்பாரனர்** என்னும் ஆசிரியர் இந்நூற்குச் சிறப்புப்பாயிர மளித்தார். இந் நூற்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினர்க்கினியர் சேனவரையர் முதலியோர் உரை செய்திருக்கின்றனர்.

அகத்தியரிடம் கல்விபயின்ற தொல்காப்பியர் முதற் பன்னிருவரும் தனித்தனி ஒவ்வொரு படல மாகப் புறப்பொருட் பன்னிரு படலம் என்னும் நூல் செய்தனர். அந்நூல் இறந்துபட்டது.

தொல்காப்பியரது சமயம் யாதெனக் கூறப் படவில்லை. தொல்காப்பியரது மதமும் திருவள் ளுவரது மதம் போன்றது எனக் கூறலாம். கடவுள் உலகம் உயிர் என்னும் முப்பொருள்களின் உண்மைகளைத் தெளிந்து சிறந்த நெறியில் ஒழுகு வதே தமிழர்களது சமயமாகும். இம்முறை உலகம் முழுமையும் உள்ள மதங்களுக்கு எல்லாம் பொது வான முறையாகும். திருவள்ளுவர், எல்லா நன்மை களையும் தருபவர் என்னும் பொருளிற் கடவுளைச் செம்பொருள் எனக் குறிப்பிட்டிருக்கின்றார். தொல்காப்பியர் துறவொழுக்க முடையவராய் விளங்கினரெனப் பாயிரங் கூறுகின்றது.

காப்பியம் என்னும் சொல்காவியம் என்னும் பொருளில் வழங்குகின்றது. காப்பியங்களைப் பெருங்காப்பியம் சிறுகாப்பியம் எனப் பிரித்து அவற்றின் இலக்கணங்களை இலக்கண நூல்கள் கூறியிருக்கின்றன. தொல்காப்பியம் அவ்விலக் கணங்களுக் குட்படவில்லை. தொல்காப்பியம் என் னும் பெயர் பழைய மரபுகளைக் காப்பதாகிய நூல் (தொல் + காப்பு + இயம்) என்னும் பொருளில் இடப்பட்டிருக்கின்றதெனத் தெரிகின்றது.

---

# 10. உயிர்களின் உருவத் தோற்றம்

தாவின் என்னும் உயிர்நூல் வல்லார் பிராணி களும் தாவரங்களும் இனங்களாக மாறுதலடையும் வகையினை நன்கு விளக்கி உயிர்களின் உருவத் தோற்றம் என்னும் நூல் எழுதியிருக்கின்றார். இவ் வுயிர்நூற் புலவரின் கருத்துக்கள் அறிஞர்களாற் பாராட்டப்பட்டு வருகின்றன. அந்நூலிற் கூறப் பட்டுள்ள பொருளின் சாரம் ஈண்டு சுருங்கக் கூறப் படுகின்றது.

பிராணிகளும் தாவரங்களும், ஒன்று ஒன்றோடு தோற்றத்தில் ஒத்திருக்கும் தன்மைகளைக்கொண்டு இனங்களாகப் பிரிக்கப்படுகின்றன. ஒரு இனப் பிராணீ அதே இனத்தின் இன்னொரு பிராணி யோடு சேரும்போது சந்ததி விருத்தி யடையும்; அவ்வினமல்லாத பிராணியோடு சேரும்போது சந் ததி தோன்றுவதில்லை.

உலகிலுள்ள சீவசாதிகள் அளவிறந்தன. அவ் வேறுபாடுகள் எவ்வாறு உண்டாகின்றன ?

காட்டிற் காணப்படும் பிராணிகளும் தாவரங் களும் மனிதனல் வளர்க்கப்படும்போது அவை களின் உடலமைப்பில் மாறுதல் உண்டாகின்றது. இவ்வகையான மாறுதல்களை ஆராய்தல் நியாயமா னது. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

ஒன்று வெப்பதட்ப நிலைமைகளும் உணவும் ஆகும். மற்றது தம்மைப்போன்ற சந்ததியை உண்டாக்கும் இயல்பு. இ ர ண் ட ா வ து இயல்பு முக்கியம் வாய்ந்தது. இவைகளால் காலப்போக்கில் பிராணி களின் உருவத்தோற்றத்தில் மாறுதல் ஏற்படுமோ வென்பது ஆராயப்பட்டுவருகின்றது.

ஓர் உறுப்பு உபயோகத்திலிருப்பதும், உப யோகத்தில் இராமையும் ஒரு பிராணியின் உடல மைப்பை மாற்றும். உதாரணமாகப் பால் கறக்கப் படும் பசுக்களின் மடி, பால் கறக்கப்படாத பசுக் களின் மடியிலும் பெரிதாய் வளர்கின்றது.

மனிதனுல் வளர்க்கப்படும் பிராணிகளும் தாவ ரங்களும் செழிப்பான இனங்களை உண்டாக்குகின் றன. இக்காரணத்தினுல் அவை பெரியனவாய் வளர்கின்றன. இதற்கு வளர்க்கும் புருவை உதா ரணமாகக்கொள்ளலாம். இவை எகிப்திய பரோவா காலம் (கி. மு. 3000) தொடக்கம் வளர்க்கப்படுகின் றன. உதாரணமாக [1] “ஆங்கில கொண்டோடி” [2] “விசிறிவாலி” முதலிய புருக்களை அவதானிக்க லாம். இவற்றை முதல்முறை பார்க்கும் பிராணி நூலார் அவைகளை வெவ்வேறு சாதிகளுக்கு ரியன என்று கருதுவர். இவை ஒரு இனத்தினின் றும்வந்து மனிதன் வளர்த்ததினுல் தோற்றத்தில் மாறுபட்டனவே.

மனிதன் வளர்ப்பதினுல் செழிப்படையும்

---

[1] English carrier [2] Fantail pouter

பிராணிகளில் விசேடமானவை தெரிந்தெடுக்கப்படு கின்றன. அவை பின்பு மனிதனால் வளர்க்கப்பட்டுப் பெருகுகின்றன. வளர்க்கப்படும் பிராணிகள்மட்டில் மனிதன் இயற்கையின் வேலையைச் செய்கிறான். அவை பெரிதாக வளர்தலே ஏற்படக் கூடிய வேறுபாடாகும். ஒவ்வொரு பிராணியின் இனத்திலும் தனித்தனி வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவை சந்ததியாக வரத்தக்கன. தனித்தனியாகக் காணப்படும் வேறுபாடுகள், பல தலைமுறைகளில் புதிய இனங்களைத் தோற்றுவித்தல்கூடும்.

ஒரு பிராணி, சீவிப்பதற்காகப் போராடுகின்றது. இவ்வகையில் தோன்றும் மாறுதல்கள் நிலைக்கும். உபயோகமான இவ்வகை மாறுதல்களை யுடைய விலங்குகளிலும் அம் மாறுதல்கள் காணப்படும். இவ்வாறு ஆதியினத்திலிருந்து உப இனங்கள் தோன்றுகின்றன.

இரண்டு நாய்கள் ஒரு எலும்புக்காகச் சண்டையிடுதலைச் சீவிப்பதற்காக நடக்கும் போருக்கு உதாரணமாகக் கூறலாம். பிராணிகள் பிழைத்திருப்பதற்கு உணவு விசேடமானது. வனாந்தரத்தில் வளரும் தாவரங்கள் தம்மைப்போன்ற மற்றத்தாவரங்களோடு மாத்திரமல்ல, கால சுவாத்தியத்தோடும் தண்ணீருக்காகவும் போரிடுகின்றன. தாவரங்கள் ஆயிரக்கணக்கான விதைகளைப் போடுகின்றன. இவற்றில் பிழைப்பன எத்தனை?

சீவியத்தின்பொருட்டுப் போராடும் தாவரங் களும் மிருகங்களும் அதிகமாகப் பெருகமாட்டா. அவையும் அவற்றின் கன்றுகளும் அழிக்கப்படு வதால் அவற்றின் எண் குறைக்கப்பட்டு வரு கின்றது. இவற்றை அழிக்கும் வல்லமைகள் இல்லா விடின் இவ்வுலகம் இவற்றின் கூட்டங்களால் நிறைந்துவிடும்.

இடங்களுக்கேற்றவாறு பிராணிகள் அதிக மாகப் பெருகுவதுண்டு. ஆதியில் மாடுகளும் குதிரைகளும் தென்னமரிக்காவிலும் அவுஸ்திரே லியாவிலும் அதிகமாகப் பெருகின.

பிராணிகளின் சந்ததிகள் அதிகம் பெருகாது தடுக்கும் இயற்கை ஒழுங்கு இருந்துவருகின்றது. பிராணிகளின் அழிவு பெரும்பாலும் அவை முட்டை கள் அல்லது புழுக்களா யிருக்கும்போது ஏற்படுகின் றது. தாவரங்களின் முளைகள் புழுக்களால் அழிக்கப் படுகின்றன. வனாந்தரங்களிலும் துருவ நாடுகளிலும் உணவு கிடையாமல் இருப்பது இதற்குக் காரண மாகலாம். உணவு அருந்தும் குணம் போராட் டத்தை அதிகப்படுத்துகின்றது. இக்காரணத்தால் வலியனவற்றினல் மெலியன அழிக்கப்படுகின்றன.

ஒரு பிராணிக் கூட்டம் மிகவும் வேகமாகப் பெருகிக்கொண்டு செல்லும்போது கொள்ளை நோய் தோன்றுகின்றது. கொள்ளை நோய் பெரும்பாலும் இரத்தத்தைக் குடிக்கும் கிருமிகளால் உண்டா கின்றது. இக் கிருமிகள் தமது சத்துராதிக் கிருமி

களை நாசஞ் செய்வதால் வேகமாகப் பெருகி யனவாகும்.

சீவிப்பதன்பொருட்டு நடக்கும் போராட்டம் பிராணிகள் வேகமாகப் பெருகுவதைத் தடுக்கின்றது. உணவுக்காகப் போராடிச் சீவிப்பதால் பிராணிகளும் தாவரங்களும் ஆரம்பத்திலிருந்து எண்ணிற் குறைகின்றன.

புதிய இனங்கள் தோன்றி அயலே உள்ள வலிமையிற் குறைந்த இனங்களை அழித்துவிடுகின்றன. இவ்வியற்கை நிகழ்ச்சிக்கு உதாரணங்களுண்டு. நீண்ட கொம்புள்ள 'யோக்சயர்' மாடுகள் தோன்றினதும் 'யோக்சயர்' கறுப்பு மாடுகள் மறைந்தன. இவை மறுபடியும் கட்டைக் கொம்புள்ள இனத்தால் அழிக்கப்பட்டன. வளர்கின்ற கிளைகள் மற்ற மரங்களின் கிளைகளைப் படச்செய்கின்றன. இது இனங்கள் அயலிலுள்ள இனங்களை அழிப்பதற்கு உதாரணமாகும். சிறு கிளைகளையும் கொம்புகளையும் தோற்றுவிக்கும் பெரிய கொம்பர்கள் ஒருபோது சிறு சுள்ளிகளாயிருந்தன. ஒருகாலத்தில் ஒன்றாயிருந்த இனங்கள் நீண்ட காலத்தில் பல சிறு இனங்களாகப் பெருகுகின்றன. மரம், பற்றையா யிருக்கும்போது பல தடிகள் இருந்தன. அது மரமாகும்போது ஒன்று அல்லது இரண்டு தடிகள்மாத்திரம் பிழைக்கின்றன.

இயற்கை, ஒரு பெரிய இனத்திலிருந்து, பல சிறிய இனங்களை உற்பத்தியாக்குதற்குரிய கார

ணங்கள் ஆராயப்படவேண்டும். உடலின் எலும்பு போன்ற கடினபாகத்தின் வேறுபாடு தசை நார்களையும் வேறுபடுத்துகின்றது. உடலின் ஒரு பகுதி வழக்கத்துக்கு மாறாகப் பெருப்பதற்கு நரம்புகள் இரத்தத்தைக் கொடுக்கவேண்டுமானால், இன்னொரு இடத்துக்குச் செல்லும் இரத்தம் குறைக்கப்படவேண்டும். அதிகம் பால் கொடுக்கும் மாடு கொழுப்படைவதில்லை. விதைகள் சிறியனவாயுள்ள பழங்கள் பெருக்கின்றன. விதை பெரிதாயுள்ள பழங்கள் சிறுக்கின்றன. மிருகங்களின் பல உறுப்புக்கள் சிறிது மாற்றமடைகின்றன. முன் உள்ள உறுப்புகள் சில, உபயோக மில்லாமையால் மறைந்துவிடுகின்றன. தனிமையாக விடப்பட்ட ஒரு பிராணி இனத்தின் உறுப்புகளில் ஒன்று பெருப்பதால் இவ்வகையில் பெரிய மாற்றம் உண்டாகின்றது. பெரிய தலையுள்ள புறாவின் மாற்றம் தலைமுறைகளில் உண்டான வேறுபாடாகும். இவ்வினத்தைக் கலப்பின்றி வைத்துக்கொண்டால் சந்ததி மாறாமல் இருக்கும்.

பட்சிச் சேவல்களின் கொண்டையும் முள்ளும் மாறுபடத்தக்கன. ஒரு தொடர்புள்ள இனங்கள் இவ்வாறு மாறுபடுகின்றன. கறுப்புக் குதிரைகளின் கால்களில் வரிக்குதிரைகளின் வரிபோல அடையாளங் காணப்படுவ தியல்பு. கழுதையும் குதிரையும் சேர்வதாற் பிறக்கும் கோவேறு கழுதைகளுக்குக் கால்களில் வரிகள் காணப்படு

கின்றன. அம்மிருகங்கள் குட்டியா யிருக்கும்போதே வரிகள் தெளிவாகத் தெரிகின்றன. வளரும்போது வரிகள் மறைந்து போகின்றன. இவ்வரைகள், குதிரை வரிக்குதிரை கழுதை என்பவற்றின் மூதாதைக் குரியனவாகும்.

பேதமான தோற்றங்கள் என்று பலமுறை கேட்டிருக்கின்றோம். ஒட்டைச்சிங்கியை உதாரணமாக எடுத்துக்கொள்ளுவோம். மற்ற மிருகங்களுக்கு எட்டாத இலைகுழைகளை நின்று தின்பதற்காக அதன் கழுத்து நீண்டிருக்கின்றது. உணவு அருகியகாலத்தில் இது மிகவும் உபயோகமானது. நீண்ட கழுத்துள்ள ஒட்டைச்சிங்கி கட்டைக் கழுத்துள்ள ஒட்டை சிங்கியோடு போரிடுகின்றது. அதனால் கட்டைக் கழுத்துள்ள ஒட்டைச்சிங்கிஇனம் மறைந்து போகின்றது. ஒரு இலையைப்போற் றற்செயலாய்த் தோன்றும் ஒருபூச்சி மேலும் மேலும் தான் இலையைப்போல் தோன்றும் தன்மையை அதிகப்படுத்திக்கொள்கின்றது.

பிராணிகள் ஒரு மத்திய இடத்திலிருந்து பரம்பி இடங்களுக்கும் சுற்றிலுமுள்ள பொருள்களுக்கும் தக்கபடி மாற்ற மடைகின்றன. அநேக விதைகள் தண்ணீரில் ஆயிரக்கணக்கான மைல்கள் நீந்திச் சென்று இறுதியில் முளைக்கும். பட்சிகள் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு வசிக்கச் செல்லும்போது ஒரு கண்டத்தில் இருந்து இன்

ெருெ கண்டத்துக்கு விதையை இரைப்பையுள் அல்லது காலிற்சிக்க வைத்துக்கொண்டு செல்லும்.

பிராணிகளும் தாவரங்களும் மனிதனுல் வளர்க்கப்பட்டுச் செழிப்படைதலினுலும், அவை உணவைப் பெறும் முயற்சியில் சில உபயோகமான மாற்றங்கள் ஏற்படுவதினுலும், அவை பின்பு தலைமுறையாக அவ்வகைச் சந்ததிகளைத் தோற்றுவிக்கையினுலும் உருவத் தோற்றங்கள் பல உண்டாகின்றனவாம்.

# 11. வீரத்தாய்மார் *

புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டம், முற்காலத்தே தன தான்யாதி சம்பத்துக்களுக்கு நிலைக்களமாயிருந்தது போலவே, வீரஇலக்குமி மகிழ்ந்து விளையாடற்குரிய விறற்களமாகவும் விளங்கிய தென்பதற்கு எண்ணிறந்த உதாரணங்களுண்டு. இவ்விடயம் இராமாயணம் பாரதாதி இதிகாசங்களாலும் பிறவற்றாலும் எளிதில் உணரப்படும். இவ்வாறு வீரச் செயல்கட்குப் பேர்பெற்ற பூமியாக நம்தேசம் விளங்கியதற்கு அநேக காரணங்கள் கூறலாம்ஆயினும்,அவை எல்லாவற்றிலுஞ் சிறந்த•காரணமாகக் கூறத்தக்கது, அந்நாளில் தோன்றிய தாய்மாரது பெருமையேயாகும். தாய்மார் மட்டும் அறிவும் ஆற்றலு முடையராய்த் தம்மக்களை நல்வழிகளிற் கவலையோடு பழக்கி வருவாராயின் அம்மக்கட் கூட்டம் உலகத்தே பெருமையும் புகழும் பெற்று விளங்கத்தடை யென்னை ?

தமிழ் மொழியிலுள்ள புராதன நூல்களாகிய புறநானூறு முதலியவற்றில் வீரச் சுவையே ஏனைய சுவைகளினும் மிகுதியாகக் காணப்படும். அக்கா

* இக்கட்டுரை, மகாவித்துவான். மு. இராகவ ஐயங்கார் எழுதிய "வீரத்தாய்மார்" என்னும் பொருளுரையின் சுருக்கமாகும்.

லத்தே தாய்மார்களால் சிறந்த வீரர்கள் எவ்வாறு படைக்கப்பட்டார்கள் என்பது இங்கே கவனிக்கத் தக்கது. வீரத்தாயர்க் கிருந்ததாக நூல்களிற் காணப்படும் குண விசேடங்களை நோக்கும்போது உலக சரித்திரத்திலேயே இத்தகைய பெருமைகாண் டற்கு அரிது என்று தோன்று மென்பதில் ஐய மில்லை. தமிழ் நாட்டில் முற்கால முதலே இவ்வீரப் பெண் மணிகளது பெருமையைப் புகழ்ந்து வந்த வழக்கமும் இருந்தது. புறப்பொருட்டுறைகளில் இது 'மூதின்முல்லை' என்று கூறப்படும்.

இவ்வீரப் பெண்டிர் செய்கைகளாகத் தமிழ் நூல்களிற் கண்ட பாடல்கள் முழுதும் நல்லிசைப்பு லமை வாய்ந்த பெண்டிர்களாலேயே பாடப்பட்டி ருத்தல் வியக்கத்தக்கதாயு முள்ளது. பொன்முடியார் என்னும் பெண் புலவர் தாய் தந்தை அரசன் மகன் முதலியவர்க்குரிய கடமைகள் இன்ன வென்பதை அடியில் வருமாறு கூறுவர்.

> "ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே :
> சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே :
> வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே :
> ஒளிறுவாள் அருஞ்சம முருக்கிக்
> களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே ."

இப்பாட்டால் அக்காலத்து வீரத்தாயரது மன நிலை இத்தகைய தென்பது தெளியப்படும்.

இது போலவே, தகடூர் யாத்திரை என்னும் பழைய நூலிலுள்ள பாட்டொன்று வருமாறு :—

தருமமும் ஈதேயாம் தானமும் ஈதாம்
கருமமும் காணுங்கால் ஈதாம்—செருமுனையிற்
கோள்வாண் மறவர் தலைதுமிப்ப என்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின்:

இப்பாட்டில், தாயொருத்தி தன்மகன் யுத்த களத்தே சாகப்பெற்றால் அதுவே தருமமும் தானமும் கருமமுமாகு மென்று கூறிய அற்புத விடயம் குறிக்கப் பட்டுள்ளது. தன்மகன் யுத்தத்தே மடிதல் தன் நாட்டின் நலம் கருதியே யன்றித் தன்னலம் கருதியன்றாதலால், அச்செயலினும் சிறந்த தருமமும் தானமும் கருமமும் பிறவில்லை என்பது கருத்து. எவ்வளவு உயர்வும் பெருமையுங் கொண்ட சிந்தை முற்காலத்துப் பெண்டிர்கட்கு இருந்தது என்பது இப்பாட்டை நோக்குவார்க்கு இனிது விளங்கும்.

இனி மற்றொரு வீரத்தாயைப்பற்றிப் பூங்கணுத்திரை என்னும் பெண்புலவர் புகழ்ந்து பாடியிருக்கின்றார். அப்பாடலின் கருத்து வருமாறு:

"கொக்கின் இறகுபோல நரைத்த கூந்தலையுடைய முதியவள் தன் புதல்வன் போரிலே யானையைவீழ்த்திக் கொன்று தானும் மடிந்தான் என்னும் செய்தியைக் கேட்டுத், தான் அவனைப் பெற்றபோது அடைந்த மகிழ்ச்சியினும் அதிகம் மகிழ்ச்சியடைந்தாள்."

இதனால் அக்காலத்தே, வீரத்தாயரான பெண்டிர் தாம் புதல்வரைப் பெறுவது, ஓர் அற்புத வீரச் செயலையேனும் அவரிடம் கண்டு மகிழ்தற்கேயென்று

கருதினவரென்பதும், அவர் வீரச்சாவில் அப்பெண் டிர்க்கு மன மகிழ்ச்சியேயன்றித் துக்கமில்லை யென் பதும் நன்கு விளங்கும். இப்பாட்டில், தாய் கண்ட அற்புத வீரச்செயல் தன் சிறுவன் ஒரு பெருங்க ளிற்றைக் குத்திக் கொன்றது.

இனி, மற்றொரு பாடல் பெரிதும் உருக்கங் காட்டி நிற்கின்றது. வீரத்தாய் ஒருத்தி தன் ஏக புத்திரனையே போர்க்கு அனுப்புகின்ற மாட்சியை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண் புலவர் பெரிதும் வியந்து பாடியிருக்கின்றார். அதின் பொருள் வரு மாறு: "தாய், முன்பு அவள் தகப்பன் யுத்தகள த்தில் யானையை யெறிந்து இறந்து போயிருப்பவும், சமீபத்தில் நடந்த போரில் தன் கணவன் எதிரி களைக்கொன்று தானும் மடிந்து போயிருப்பவும், இவற்றிற்காக மனந்தளர்வின்றி, எதிரிகளின் யுத் தப்பறை ஒலிப்பதைக் கேட்டு மகிழ்ச்சி மிகுந்து, தன் சிறுவனுக்கு ஆடையணிந்து, அவன் குடுமியை எண்ணெயிட்டுச் சீவி முடிந்து, தான் ஒரு புதல்வனை யுடையளாயிருந்தும் சிறிதும் மனங் கலங்காது, போர்க்களம் நோக்கிச் செல்க என்று அவனை அனுப் புகின்றாள். இச் செய்கையைக்கண்ட என் மனம் கெடுவதாக; இவள் துணிவு அஞ்சத்தக்கதாகும்; பழைய வீரக்குடியிற் பிறந்தவளென்பது இவட்குத் தகும்"

என்ன வீரம்! இதனிலும் ஆச்சரியமானசெய்தி கேட்டதுண்டோ?

இனி மற்றொரு பாடல் மேற்கூறியதினும் மிக்க வீரத்தன்மையைக் குறிப்பதென்னலாம். இதுவும் காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்னும் ஒரு பெண் புலவர் பாடியதாகும் அதன் பொருள் வருமாறு.

"வயது முதிர்ந்த ஒரு தாய் தன் சிறுவன் யுத்தத்தில் வலியழிந்து புறங்கொடுத் தோடினன் என்று பலர் சொல்லக்கேட்டு, 'அவ்வாறு அவன் போரிற் புறங்கொடுத் தோடினவனாயின் அவன் பாலுண்டு வளர்தற்குக் காரணமான அங்கத்தை அறுத்திடுவேன்' என்று வாளைக்கையிற் கொண்டு போர்க்களம் புகுந்து, வீழ்ந்து கிடக்கும் பிணங்களைப்புரட்டித் தேடி வருபவள் இரு துண்ட மாகக் கிடந்த தன் மகன் உடலைக்கண்டு, அவனைப் பெற்ற போதடைந்த மகிழ்ச்சியினும் அதிக மகிழ்ச்சியடைந்தாள்." இப்பாட்டிற் கூறப்பட்டதை நோக்கும் போது, இத்தகைய வீரத்தாய்மார்கள் உலகத்திலேயே அரியர் என்று தோன்றுமென்பதில் ஐயமில்லை. இவ்வாறே ஔவையார் பாடிய செய்யுள் ஒன்று புறநானூற்றிற் காணப்படுகின்றது. அப்பாட்டிலே, "தகடூரில் எதிர்த்த பகைவர் சேனையின் ஊடேவீழ்ந்து அவரை வெட்டிக் கொண்டேசென்று அச்சேனை நடுவில் தானும் வெட்டுண்டு இருதுண்டமாகக் கிடந்த தன் புத்திரனது மாட்சியைக்கண்டு அகங் குளிர்தலால், அவனைப்பெற்றவயது முதிர்ந்த தாய்க்குப்பால் சுரந்தது." என அழகு பெறக் கூறியிருத்தல் படித்து மகிழத்தக்கது.

இனி, புறநானூற்றில், ஒருவர் காவற் பெண்டு என்னும் பெண்புலவரை நோக்கி, 'நும்மகன்யாண் டுளன்?' என்று கேட்க, அதற்கு அவள் கூறிய விடை வருமாறு.

"சிறிய வீட்டிலே நல்ல தூணைப் பிடித்துக் கொண்டு, உன்மகன் எங்குள்ளான் என்று கேட் கின்றாய்; என்னுடைய மகன் எவ்விடத்திருப்பினும் யான் அறியேன். புலி தங்கிப் போன மலைக்குகை போல அவனைப் பெற்ற வயிறோ இது; அவன்யுத்த களத்திலே தோன்றுவன்; ஆண்டுச் சென்றுகாண் பாயாக." வீரமக்களைப் பெறுவதில், பழையகாலத் துப் பெண்டிர் அடையும் மகிழ்ச்சியும் பெருமிதமும் இத்தன்மையன என்பது இதனால் நன்குவிளங்கும்.

இனித்தம் வீரமக்கள் போர்க்குச் சென்று அங்கே சிறிது மானத்தாழ்வான செயலைச் செய்த தாகத் தெரியவரின், அவர் தாயர் அம்மக்களைமிகச் சினந்து வெறுப்பர். ஒரு தாய், தன்மகன் பகைக் களிற்றின் மேலே வேலை யெறிந்து அவ்வேலைத் திரும்பப் பெறும் ஆற்ற லில்லாது வெறுங்கையனா கப்புறங்கொடுத்தது கண்டு கூறுகின்றாள் :

"பகை யரசரைப் போரில் வென்று அக்களத் திலே நீயும் இறந்து படாமல் யானை முகத்தெறிந்த நின்வேலை அதனோடு போகவிட்டு நீ புறங்கொடுத் துத்திரும்பினை; இதனால் எமது முன்னோர் செய் யாத பெரும்பழியை விளைத்த மூடனாகினாய். நீ தங்கி யிருந்த என்வயிற்றை அறுப்பேன் அறுப்பேன்!

இவ்வாறு, தமிழகம், முன்னாளில் அறிவாற்றல் மிக்க வீரத்தாய்மார்களை உடையதாகி, அருமையும் பெருமையுங் கொண்ட செயல்களுக் குரிய நிலைக்களமாயிருந்தது. அவர்கள் வீரர்கள் குடிகளின் பொருட்டும் தங் நாட்டு அரசன் பொருட்டும் ஆத்ம பரித்தியாகம் செய்வதிற் பயிற்சி மிக்கவர்களாய், சமயம் நேர்ந்த போதெல்லாம் அவ்வாறு செய்து, தமிழகத்தின் பெருமையை மலைமேலிட்ட தீபம் போல விளக்கி வந்தனர். சங்க நாட்களில் தமிழ் நாட்டின் மேல் வடவரசரேனும், பிறவரசரேனும் படையெடுத்து வென்ற செய்தி கேட்கப் படுதலே அரிது. ஆனல் தமிழரசர் வடவருடனும் பலபிறருடனும் போர்புரிந்து வெற்றி கொண்ட விஷயம் காணலாம் இதன் காரணம் அக்காலத்து விளங்கியதமிழர்வீரத்தின் பெருமையேயாம். அத்தகைய வீரத்தை வளர்த்து வந்தவர்யார்? தமிழ்த்தாயர்களே யன்றோ?

அங்ஙனம் வீரத்தாயர்கள் விளங்கிய தமிழகம் அந்நாளில் ஏனைய நலங்களாலும் நிரம்பின; நாடு செல்வத்தில் மிதந்தது; நாகரிகம் உச்சநிலை அடைந்தது. பொருட் செல்வமும், கல்விச் செல்வமும் ஒருங்கே பூரித்தன. வியாபாரமும் கைத்தொழிலும் விருத்தி யெய்தின. அன்றியும், வீரஇலக்குமி வீற்றிருந்த இந்நாடு உலகுக்கோர் பண்டகசாலை எனவும் திகழ்ந்தது. தமிழரது கடல் வர்த்தகம் வெகு தூரம் வரை வியாபித்தது இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கி எகிப்தியரும்

பபிலோனியரும் தமிழரோடு வர்த்தக உறவு பூண் டிருந்தனர். யூதேய நாட்டரசன் சலமன் காலத் தில் அவ்வர்த்தகம் பின்னும் விருத்தி எய்திற்று. பின்னர் யவனர் தலைப்பட்டனர்; உரோமர் அவ ரைத் தொடர்ந்தனர். கிறிஸ்தாப்த ஆரம்பத்தில், உரோமாபுரி உன்னத தசையை யடைந்திருந்த பொழுது ஐரோப்பா முழுதும் அதன் கீழ் அடங் கிற்று. எகிப்தும் அதன் குடைக் கீழ் ஒடுங்கிற்று. உரோமைச் சக்கரவர்த்திகளோ தமிழ் அரசருடன் உறவு பூண்டொழுகினர் அக்காலததில் உரோமை இராச்சியத்திற்கும் தமிழகத்திற்கும் வர்த்தகம் எவ் வளவு பெருமிதமாய் நடந்தேறிய தெனின், வருடந் தோறும் ஏறக்குறையப் பதினைந்து கோடி ரூபாய் பெறு மதியான பொன் நாணயங்களை உரோமாபுரி தமிழகத்திற்கு அனுப்பி வந்த தென்றும், இங்கு நின்று ஏற்றுமதியான சரக்குகள் அந்நாட்டில் நூறுமடங்கு அதிக விலைக்குப் போயின என்றும், பிளினி என்னும் சரித்திராசிரியர் தமது குறிப்பில் எழுதியுள்ளார். ஸ்த்திராபோ என்ற மற்றொரு சரித் திரகாரர், 'செங்கடற் றுறை முகத்தினின்றும் நூற் றிருபது கப்பல்கட்குக் குறையாதவை இந்தியா விற்குப் புறப்பட்டுப் போகப்பார்த்தேன்' என்று குறிப்பிட்டிருக்கின்றனர், ஆ! தமிழ் வர்த்தகப் பெருமையை என்னென்பேம்! அக்கலாத்தில் அரா பியக் குடாக்கடலிற் கடற் கொள்ளைக்காரர் அதிகம் இருந்தபடியால், வர்த்தகக்காப்பின் பொருட்டு, மேற்

றிசை வர்த்தகருக்கு முதல் வர்த்தகத் தானமா யிருந்த முசிறிப் பட்டினத்தில் உரோமைப் போர் வீரர் 2000 பேர் நிலைவரமாய் நிறுத்தப்பட்டனர் என்றும் அறிகின்றோம். உரோமரும் யவனரும் தமிழர் படையிற் சேவித்தலைப் பெருமையாகக் கொண்டனர். மதுரையின் கோட்டை வாயில் உரோமைப்போர் வீரராற் காக்கப் பட்டது. இவ்வாறே, தமிழகம் இற்றைக்கு ஈராயிர வாண்டுகளுக்கு முன்னர் இவ்வளவு சீருஞ் சிறப்பும் பெற்றிருந்தமைக்கு அந்நாளில் தம்மக்கட்குத் தேசாபிமான மூட்டி வளர்த்த வீரத்தாயரே காரணம் ஆவர். "திரைகடலோடியும் திரவியந்தேடு" என்பதும் அந்நாளில் தென்னாட்டிற் சிறந்த ஒரு பெண்மணியின் வாக்கேயாகும். அக்காலத்துத் தமிழ்த்தாய்கள் மிக்க புலமையும் வாய்ந்து விளங்கினர் என்பதற்குச் சங்க நூல்களே சான்றாம்.

சங்ககாலத்துக்குப் பின், அறிவும் ஆற்றலுமுடைய வீரத்தாய்மார்களும் ஆத்ம பரித்தியாகஞ் செய்ய வல்ல வீரமக்களும் குறைந்து வந்தமையாற் போலும், வடவேந்தர் பலர் தமிழகத்தே பிரவேசிக்கத் தொடங்கிய செய்திகள் கேட்கப்படுகின்றன. சங்ககாலத்துக்குப் பின்பு வடவர் தமிழர்களுக்குள் நிகழ்ந்துவந்த போர்கள் அளவு படுவனவல்ல. பல்லவரென்றும் இரட்டரென்றும் சளுக்கரென்றும் கடம்பரென்றும் கூறப்படும் வடவரசர் தொகுதி பல தமிழகத்தைக் கைப்பற்றின. அதனால் தமிழ் வேந்த

ராகிய சேர சோழ பாண்டியரும் பிறரும் தம் பழம் பெருமை குன்றினர். முடிவில் ஆண்மையும் தியாக முமாகிய பயிற்சிகள் குறையத் தமிழர் வீரம் முற் றும் தலைகவிழ்ந்தது. இக்காலத்தவராகிய நம்ம வர்க்கோ மேலே கூறிவந்த அற்புத வீரச்செயல்க ளெல்லாம் கற்பனைக் கதைகளாகவே தோன்று வன. ஏனெனில், நம்மவரது மனநிலை அவ்வளவு குன்றியொழிந்தது. கால சக்கரத்தின் சுழற்சியால் ஓரிடத்திற்குள்ளே உண்டாம் அற்புத மாறுதல்கள் இவை.

# 12. *சூளாமணிக் கதைச் சுருக்கம்

உலகிற் சிறப்புற்றோங்கிய சுரமை என்னும் நாட்டிற்கு இராசதானியாகிய போதனைமாநகர் என்னும் ஒரு பட்டினம் உள்ளது. அந்நகரத்துக்குப் பிரசாபதி என்று ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு மனைவியர் பலர். அவர்களுள் பட்டத்துத் தேவிமாராய் மிருகாபதி என்றும் சசி என்றும் இரு பெண்கள் இருந்தார்கள். இவர்களோடு கூடி அரசன் இன்புற்று வாழுநாளில் முன்செய்த புண்ணிய பலத்தால் பலபத்திர அவதாரமாக வெண்ணிறமுடைய விசயன் என்றொரு புதல்வனை மிருகாபதி பெற்றாள். சசி என்பவள் திருட்டினைவதாரமாகக் காயாம்பூ வண்ணனாகிய திவிட்டனென்றொரு குமரனை ஈன்றாள். இப்புதல்வரிருவரும் இளமைப் பருவத்திலே சகல வித்தைகளையும் கற்றுச் சுந்தரமுள்ளவர்களாய் வளர்ந்தார்கள்.

ஒருநாள் ஒரு நிமித்திகன் பிரசாபதி அரசன் இருக்கும் கொலுமண்டபத்தில் வந்து அரசனோடு சில வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் அரசனை நோக்கி "அரசே! விஞ்சையருலகத்தில் நின்றும் ஒரு யானை வந்து நுமது இளைய மகன் திவிட்டனை வெண்மாலை சூட்டி

* சூளாமணி — சிறுகாப்பியங்கள் ஐந்தில் ஒன்று

அழைத்துக்கொண்டு செல்ல ஒரு கனக் கண்டேன். அதின்பலன் விஞ்சையராசனொருவன் இங்கே வந்து தன் மகளை நின் இளைய குமாரன் திவிட்டனுக்கு மணஞ்செய்து கொடுத்துச் செல்வான் என்பதே யாம். அதற்கு அடையாளம் இன்று முதல் ஏழு நாளுள் ஒரு விஞ்சையன் நின் புட்பமாகாண்டம் என்னுஞ் சோலையில் ஒரு திருமுகங் கொண்டிறங்கு வான். அதையும் காணுதி," என நவின்றான். அது கேட்ட அரசன் துருமகாந்தன் என்று பெயர்பெற்ற ஒரு வீரனை அழைத்து முற்கூறிய காவிலே விஞ்சை யனுடைய வரவைக்காணும் பொருட்டுக் காவல் வைத்தான்.

இஃதிவ்வாறாக விஞ்சையருலகில் தென் திசைக் கண்ணுள்ள இரதநூபுரச் சக்கர வாளமென்னும் நக ரைச் சுவனசடி என்னும் அரசன் அரசாண்டான். அவனுக்கு மனைவியர் பலர். அவருள் பட்டத்துத் தேவியாகிய வாயுவேகை என்பவள் வயிற்றிலே அருக்க கீர்த்தி என்றொரு திருக்குமாரனும், அவ னுக் கிளையளாய்ச் சுயம்பிரபை என்னும் புதல்வி யும் உதித்தனர். சுயம்பிரபைக்கு மணஞ் செய்யும் பருவம் வந்தது. தந்தையாகிய சுவனசடி அமைச்ச ரோடு ஆலோசித்தான். அவர்கள் ஒருவர் கூறிய படி மற்றவர் கூறாது மாறுபட்டனர். ஆகவே அர சன் அவ்வாலோசனையை ஒழித்துச் சதவிந்து என் னும் நிமித்திகனது இடத்தை அடைந்தான். அந் நிமித்திகனும் அரசன் வரவை நிமித்தத்தா

லுணர்ந்து "நின் புதல்விக்கு மணவாளன் நிலவுல கத்திறைவன் பிரசாபதியின் இளைய குமாரனாகும். அவன் ஒரு திங்களுக்குள் ஒரு சிங்கத்தையும் வதைப் பான் காண்பாயாக," என்று நவின்றான். அது கேட்ட சுவனசடி ஒரு திருமுகம் வரைந்து மருசி என்னும் வித்தியாதரன் கையிற் கொடுத்தான். கொடுத்து இதனைப் போதன நகர்க்கு இறைவற்குக் கொடுத்து நன்முகம் பெற்று வருதி என உரைத்து அனுப்பினான். அவ்விஞ்சையன் அவ்வாறே புறப் பட்டுப் போதனமா நகரிலுள்ள புட்பமாகாண்டம் எனும் பொழிலிடை இறங்கினான். அப்பொழுது இவன் வரவைக் காணும்படி காத்திருந்த துருமகாந் தன் கண்டு உபசரித்து அவ்விடத்திலுள்ளதோர் பாறைமீது அவனை இருக்கச் செய்து, அவன் வரவை அரசனுக்குணர்த்தினான். பிரசாபதி அநேக வரி சைகளோடு தன்புதல்வரையும் யானைமேல் ஏற்றி அவனை எதிர்கொள்ளுமாறனுப்பினான். அவர்கள் வரவைக் கண்ட மருசி எழுந்து கை குவித்து மரி யாதை செய்தான். இராச குமாரரும் அவனுக்கு உபசாரஞ் செய்து அவனை ஊர்திமேலேற்றிக் கொண்டு தந்தையிடம் வந்தார்கள். வந்தபொழுது பிரசாபதி கண்டு உபசரித்து அவனுக்கு ஆசனங் கொடுத்து அமரவைத்தான்.

சிலநாழிகை சென்றபின் மருசி எழுந்து நின்று சுவனசடியரசன் கொடுத்த திருமுகத்தை அரசன் முன் நீட்டினான். அரசன் உத்தரவினால் ஒருவன்

அதை வாங்கி விரித்து, " இரதநூபுரத்திறைவன் போதநகர் இறைவருக்கு எழுதிக்கொள்வது, எனது புதல்வி சுயம்பிரபைக்கு நின் இளையகுமாரன் திவிட்டனே மணவாளனென நிமித்திகர் கூறுதலினால் நீர் இதற்கு உடன்பாடு சொல்லி யனுப்புக," என்று வாசித்தான்.

அதுகேட்ட அரசன் அதிக வியப்படைந்து பிரமித்துச் சற்றுநேரம் ஒன்றும் புகலாதிருந்தான். அப்பொழுது இவன் வாளாவிருத்தலைக்கண்ட விஞ்சையன், தன் அரசனேலையை மதியாதிருந்தானென்று நினைத்துக் கோபமடைந்தான். அது கண்ட பிரசாபதி அவனை நோக்கி "நான் மனிதன், நீங்கள் விஞ்சையர் ஆதலால் இவ்விவாகம் பொருத்தமுடையதா என்று சந்தேகித்தும், உங்கள் புதல்வியை என் புதல்வன் மணஞ் செய்ய இருந்த புண்ணியம் என்னையோ என்றுபிரமித்தும் இருந்ததன்றி உமதரசனுடைய திருமுகத்தை மதியாதிருந்தேனல்லன்," என உண்மையைக் கூறினான். மருசி மகிழ்ந்து விஞ்சையருக்கும் மனிதருக்கும் தொன்றுதொட்டுச் சம்பந்தமுண்டென்று பல காரணங் காட்டி உரைத்தான். பிரசாபதி மனமகிழ்ந்து உடன்பட்டுப் பல உபசார வார்த்தைகள் சொல்லியனுப்பினான்.

மருசியும் விஞ்சைய ருலகடைந்து அரசனைக் கண்டு விவாகத்துக்குப்பிரசாபதிஅரசன் உடன்பட்டமையைக் கூறினான். அதனைக் கேட்ட சுவனசடி

மகிழ்ந்து, "நிமித்திகனுரைத்த வார்த்தை முழுது முண்மை; இன்னும் அந்நிமித்திகன் அவ்விராசகுமாரன் ஒரு திங்களுள் ஒரு தீயவதை செய்வானென்று கூறினன்; அதனையுமறிவோம்," எனக் கருதினன்; கருதி ஒரு விஞ்சையனை யழைத்து "நீ போதனமா நகரிற் சென்று ஒரு திங்கள்வரையுமிருந்து அங்கே நிகழும் சம்பவங்களை எல்லாம் அறிந்து வருதி," எனக்கூறி அனுப்பினன்.

விஞ்சையருலகம் முழுவதையுமரசாண்டு, சுவண சடி அரசனிடத்திலும் திறைவாங்கும் ஏகசக்கிராதிபதியாகிய அச்சுவகண்டனென்னும் ஓர் அரசனிருந்தான். ஒருநாள் சதவிந்து என்னும் நிமித்திகன், அச்சுவகண்டனையடைந்து அளவளாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் அரசனை நோக்கி "உலகங்களெல்லாவற்றையும் பொதுநீக்கி அரசாளுகின்ற உமக்குப் பூமியிலுறைகின்றவனை ஒரு மனிதன் பகைவனாக இருக்கின்றான். அவன் போதன நகரத்து இறைவனது புதல்வன் திவிட்டன் என்பவனென்று எனக்கு ஒரு நிமித்த பலனுண்டு," என்றுரைத்தான். அதுகேட்ட அச்சுவகண்டன் "என்னை வெல்பவன் ஓர் எளியனான மனிதன்தானோ?" என்று நகைத்துச் சீறி "யான் இதனை ஒரு சிறிதும் பொருளாகக் கருதேன். ஆயினும் நிமித்திகராகிய நீர் இப்படிச் சொல்லுதலால் சிறிதாலோசித்தலும் வேண்டும்," எனக்கூறி மந்திரிமாரை அழைத்து வினவினன்.

மந்திரிமாருள் ஒருவனாகிய அரிமஞ்சு என்பவன் வணங்கி "அரசே! நிமித்திகன் கூறினும் யாம் அவனை நேரே பகையெனக் கண்டல்லது அதற் கேற்ற முயற்சியொன்றும் செய்யலாகாது. ஆத லால் பிரசாபதி அரசனிடம் திறை தரும்படி சிலரை அனுப்புவோம்; தராதொழிந்தால்அவன் சத்துரு என்று அறியலாம்," என்று உரைத்தான். அர சன் அவ்வாறே திறை வாங்கும்படி சிலரை அனுப்பி னான். அவர்களும் போதன நகரத்து இறைவனைக் கண்டு, அச்சுவ கண்டன் கொடுத்த ஓலையைக் காட்டி னார். அதனை வாங்கி ஒருவன் வாசித்தபோது செவிக்கொண்டிருந்த பிரசாபதி அரசன் அச்ச முற்றான்; அச்சுவகண்டன் கேட்டபடி ஆயிரம் பொன்னும் ஆயிரம் மகளிரும், முத்தும் பவளங்க ளும், யானைத் தந்தமு மாகியவற்றைத் திறையாகக் கொடுத்தான். விஞ்சையர்கள் அவற்றை விமானத் தில் ஏற்றிக்கொண்டு செல்ல முயன்றனர். அப் போது திவிட்டன்கண்டு, இஃது என்ன காரிய மென்று வினவியறிந்து சீறித் திறைப்பொருளைத் தடுத்து அவர்களை ஓட்டித் துரத்தினான். பயந்து சென்ற விஞ்சையர், மந்திரியாகிய அரிமஞ்சுவைக் கண்டு நடந்தவைகளைக் கூறினர். அதனைக்கேட்ட அமைச்சன் இதனை அரசன் அறிந்தானாகில் அதிக சினங்கொள்ளுவா னாதலின் அவற்குரையாதிருங்க ளென்று சொன்னான். அவன், இனி இத்திவிட்ட குமாரனை மாயத்தாற் கொல்லுவோமென்று கருதி

அரிகேது என்னும் வித்தியாதரனை யழைத்து "நீ ஒரு மாயச் சீயமாய்ச்சென்று திவிட்டனைக்கொன்று வருதி," என அனுப்பினான்; முன்னே திறைக்குச் சென்ற விஞ்சையர்களை அழைத்து, "எங்கள் அரசன், நீ திறை தடுத்தமையை அறிந்து, 'தன்நாட்டை யழிக்கும் ஒரு சிங்கத்தைக் கொல்லுஞ் சத்தியற்றவன்தானா என்னை அவமதித்தான். இஃது அவன் குழந்தைமதி' என்று சிரித்தான்," என்று திவிட்டனிடம் புகலுமின் எனக்கூறி விடுத்தான். அவர்களும் அவ்வாறே வந்தறிவித்தனர்.

அதனைக் கேட்ட திவிட்டகுமாரன் கோபங் கொண்டு தமையனுடன் பாதசாரியாகச் சிங்கத்தைத் தேடிச் சென்றான். அப்பொழுது மாயச்சீய வடிவுகொண்ட வித்தியாதரன் இவர்கள் கண்காணும்படி ஓடி வேறொரு உண்மைச் சிங்கம் இருக்கும் குகையுட்சென்று மறைந்தான்; துரத்திச்சென்ற திவிட்டகுமாரன் அம்முழைஞ்சின் வாயிலிலே நின்றாரப்பினான். அங்கிருந்த உண்மைச் சீயம் அரசகுமாரனைக் கொல்லும்படி கர்ச்சித்துக்கொண்டு புறப்பட்டது. திவிட்டன் அதன் பிடரியிற்றாவி அதன் வாயைக்கிழித்து இரண்டு பிளவாயெறிந்து தமையனோடுங் கூடித் தன்னகரடைந்தான்.

இந்நிகழ்ச்சிகளை, முன்னனுப்பிய ஒற்றனாலுணர்ந்த விஞ்சையராசன் களிகூர்ந்தான். தன்மகளைத் திவிட்ட குமாரனுக்கு உடனே மணஞ்செய்யக் கருதித் தன் நகருக்குக் காவல் வைத்து விமானம்

ஒன்று அழைப்பித்துத் தன்மகளை ஏற்றிக்கொண்டு மகன் அருக்க கீர்த்தி, தம்பி சுவணரதன் முதலானவர்களோடு போதன நகரையடைந்து அங்குள்ள திருநிலையகம் என்னும் பூங்காவிற் றங்கினான். அப்பொழுது மருசி, பிரசாபதி அரசனிடம் சுவனசடிதன் மகளிர் மணப்பொருட்டாக வந்தமையை அறிவித்தான். அதுகேட்ட அரசனும் களிகூர்ந்து நகரத்தை அலங்கரித்துத் தன் புதல்வரோடும் தம்பி சீபாதனோடும் யானைமேலேறிச் சென்று விஞ்சைய ராசனைக் கண்டு வணங்கினான். அவன் இவனைத் தழுவ ஒருவர்க்கொருவர் முகமன் வார்த்தை பேசிக் கொண்டாடினர். பிரசாபதி அவர்களை அழைத்துக் கொண்டு தன் அரண்மனை யடைந்து அவர்களுக்கு வேண்டுஞ் சிறப்பளித்துச் சுயம்பிரபை முதலிய விஞ்சய மகளிரைத்தன் தேவியினிடத் தனுப்பி உபசரித்தான். மற்றைநாள் மணமுரசறைவித்து மைந்தற்கும் மகளுக்கும் மணக்கோலஞ் செய்து மங்கல வாத்தியம் முழங்கச் சுபமுகூர்த்தத்தில் திருமங்கலியம் தரித்தல் முதலிய கிரியைகளுடன் விவாகம் நடத்தி, அருக்ககீர்த்திக்கும் சோதிமாலையை மணஞ் செய்து கொடுத்தான்.

அப்பொழுது விஞ்சைய ருலகினின்றும் ஒருவன்வந்து சுவனசடி அரசனைவணங்கி "ஐயனே! தேவரீர் இங்கே வந்து புதல்விக்கு விவாகம் முடித்தலும், திவிட்ட குமாரன் சேயவதை செய்ததுமாகிய எல்லாவற்றையும் அரிகேது முதலியோரால் றிந்த

அச்சுவகண்டராசன் அதிக சினங்கொண்டு தங்களோடு சமரியற்றக் கருதி, யுத்தசன்னத்தனாய்ச் சேனைகளோடு வருகின்றான் என்று சொன்னான். அதுகேட்ட இரத நூபுரத்தரசன் மைந்தராகிய அருக்ககீர்த்தி, பிரசாபதி, விசயன், திவிட்டன் முதலியோரை அழைத்து இக்காரியங்களைக் கூறினான். அவர்களும் கோபாதீதராய்ச் சமர்க்கோலங் கொண்டார்கள். திவிட்ட குமாரனை மாமனாகிய சுவனசடி அழைத்து ஒரு மாயா மந்திரோபதேசஞ் செய்தான். அப்போது விஞ்சைய ருலகினின்று தூதரிருவர் இவர் சமுகத்தை யடைந்து "யாம் அச்சுவக்கண்டனுடைய தூதர்; அவர் கூறிய சிலவார்த்தைகளைச் சொல்லவந்தோம். நீங்கள் உயிர்வாழ விரும்பினால் சுயம்பிரபையைத் தாருங்கள்; அல்லது யுத்தத்தில் ஆவிவிடுங்கள்; இவ்விரண்டில் யாது செய்யக் கருதுகின்றீர்கள்," என்று வினவி நின்றனர். அதுகேட்ட அரசர்கள் கோபங்கொண்டு உமதரசன் இங்கேவந்து இவனடிகளை வணங்கினாலுயிர் பிழைப்பன். தனக் குயிர்வேண்டுமோ மானம் வேண்டுமோ எனக்கேட்டு வருவீராக என்றுரைத்தனர். தூதர் அதை அச்சுவனுக்குரைத்தனர். அது செவிமடுத்த விஞ்சையர் வேந்தன் கோபங்கொண்டு சிறிச் சேனைகளோடு வந்தான். பிரசாபதியும் தன் சேனைகளோடு எதிர்த்தான்.

இருதிறப்படைகளும் எதிர்த்து யுத்தஞ்செய்யும் போது, அச்சுவகண்டனது படை தோற்றது

அதனைத் தூதர் விரைந்து சென்று அச்சுவகண்டனுக் குரைத்தனர். அவன் அதிக கோபங்கொண்டு உலகங்களையும் உயிர்களையும் வாரிக் கடலுளமிழ்த்த வல்ல சண்டவேகை யென்னும் மாயாதேவதையை ஏவி விட்டான். அது கண்டவர்கள் அஞ்சத்தக்க உக்கிரவடிவோடு பேய்கள் புடைசூழ வந்தது. அது கண்ட பிரசாபதியுடைய சேனைகளெல்லாம் புறந்தந்தோடின.

அப்பொழுது திவிட்டகுமாரன் தன் மைத்துனனாகிய அருக்ககீர்த்தியை நோக்கி இங்கே வருகின்ற இவ்வடிவம் யாதென்று வினவ, அருக்ககீர்த்தி "மாற்றவனால் விடுக்கப்பட்ட சண்டைவேகையென்னும் இம்மாயாதேவதை பகைவருயிருண்டாலன்றித் திரும்பாது;" என்று கூறினன். அதுகேட்ட திவிட்ட குமாரன் சினங்கொண்டு ஆகாயமளவுயர்ந்ததோர் பெரிய வடிவங்கொண்டான். அப்பொழுது பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கும், சாரங்க வில்லும் கையில் வந்து சேர்ந்தன. திவிட்டன் சங்கை வாயில் வைத்தூதி ஒருதரம் உரப்பினன். உரப்பவே மாயாதேவதை அச்சமுற்றுத் தன் சுயவடிவடைந்து அவ்விடம் விட்டோடியது. அதுகண்ட அச்சுவகண்டன் ஒரு யானைமேலேறிச் சமர் செய்யவந்தான். திவிட்ட குமாரனுக்கு வாகனமாகக் கருடனும் வந்து சேர்ந்தான். அக்கருடனை வலங் கொண்டு அவன் மேலேறி வில்வளைத்துத் திவிட்டகுமாரன் போர் செய்ய வருதல் கண்டு அச்

சுவகண்டனும் எதிர்த்துப் பலவகை ஆயுதப்போர் இயற்றினன். முடிவில் தனது ஆஞ்ஞாசக்கரத்தை ஏவினன். அது திவிட்டகுமாரனிடத்து வந்து வணங்கி அவனேவலால் திரும்பிச் சென்று அச்சுவ கண்டனது சிரசைத் துணித்தது. அப்போது இறவாதொழிந்த அவன் சேனைகளெல்லாம் புறங் காட்டி ஓடின. அச்சுவகண்டன் உயிர் துறந்த மையை ஒற்றராலறிந்த அவன் தேவிமார் பலரும் போர்க்களத்தில் வந்து அவன்மேல் வீழ்ந்து பல வாறு புலம்பித் திரும்பித் தம் விஞ்சையருல கடைந்து திருமங்கலியங்களைக் களைந்து கற்புநெறி யிற்றவுறாது விதவை விரதமநுட்டித் திருந்தார்கள். பிரசாபதியரசன் தன் புதல்வருடைய போர்வலி கண்டு பலவாறு புகழ்ந்து ஆனந்த பரவசத்தனாய் மந்திரிமாரை அழைத்துச் சுப முகூர்த்தத்தில் பட்டாபிஷேகஞ்செய்து அரசுரிமையை அவர்களி டம் ஒப்பித்தான்.

இராச குமாரர்களிருவரும் பிதாவின் எண்ணப் படி முடிதரித்தபோது, புலவர்கள், பகைவரை வென்று அரசாளும் வீரர்கள் ஒருமலையையும் தனியே பிடுங்கல் வேண்டும் என்று சாத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றதென்றனர். இவ் வார்த் தையைக்கேட்ட திவிட்ட குமாரன் போய்க் கோடிக் குன்றம் என்னும் ஓர் மலையை வேரோடு பறித்து ஏந்தினன். அதுகண்டு யாவரும் அதிசயித்துத் துதித்தனர். பின் திவிட்டகுமாரன் தன் மாம

னாகிய சுவனசடியை விஞ்சையருலகம் முழுவதையும் அரசாளும்படி ஏவிச் சுயம்பிரபையோடு இனிது வாழ்ந்துவந்தான். பட்டத்துத் தேவியாகிய சுயம்பிரபை கருப்பவதியாய்ச் சுபமுகூர்த்தத்தில் அமிர்தசேனனென்னுமோர் புத்திரனைப் பெற்றாள். அந்நாளிலே அருக்ககீர்த்திக்கும் சோதிமாலை என்பவளிடம் சுதாரை என்னும் ஒரு புத்திரி பிறந்தாள். பின்னும் அருக்ககீர்த்தி ஒரு புதல்வனைப் பெற்று விஞ்சையருலகை அரசாண்டிருந்தான்.

இப்படி இருக்கும் நாளில் திவிட்ட குமாரனுக்கும் மின்சோதிமாலை என்னும் ஒரு புத்திரி பிறந்தாள். மகள் வளர்ந்து மணப் பருவமடைந்தது கண்ட அரசன் எங்கும் சுயம்வர ஓலை போக்கினான். மகளை அழைப்பித்துத் தோழிகளால் சுயம்வரத்துக்கு வந்த அரசர் பலரையும் காட்டி, விஞ்சையராசன் புதல்வனையும் காட்ட அவள் அருக்ககீர்த்தியின் மகனுக்கு மாலை சூட்டினாள். பின் அருக்ககீர்த்தியும் சுயம்வரம் நாட்டினான். விஞ்சைய குமாரியும் மைத்துனனான அமுதசேனனுக்கு மாலை சூட்டினாள். அருக்ககீர்த்தி, மகளுக்குச் சுபமுகூர்த்தத்தில் அக்கினி காரியத்துடன் திருமங்கலியதாரணஞ் செய்வித்துப் பின்பு தன் மகனையும் மருமகளையும் அழைத்துக்கொண்டு விஞ்சையருலகடைந்து அரசாண்டு வாழ்ந்தான். திவிட்ட குமாரனும், அமுதசேனனையும் மருமகளையும் தன் நகரத்திலிருத்திச் சகல சிறப்போடு மரசாண்டிருந்தான்.

இப்படி வாழ்ந்திருக்கும் நாளில் பிரசாபதி யரசன் தன் பௌத்திரர்களுடைய சீராட்டைப் பார்த்து மனமகிழ்ந்து நமக்கு இச் சிறப்புக்கள் எல்லாம் முன்செய்த நல்வினை தந்ததன்றோ! இன்னும் யாம் நல்வினை செய்தால் இந்தக்குலம் நன்றாய் வளர்ந்தோங்குமெனக் கருதி அமைச்சரோடாராய்ந்தான். அவர்கள் துறவறமே எல்லா வறங்களிலும் சிறந்ததென்று கூற, அவன் துறவு செய்யத்துணிந்து அருகக்கடவுளுக்குத் திருவிழாச் சிறப்பெடுக்கக் கட்டளையிட்டு மந்திரிமாரோடும், புத்திரரோடும், விழாவுக்கேற்ற பொருளோடும் அருகன் கோவிலை அடைந்தனன். அப்பொழுது அருகக்கடவுள் காட்சி கொடுத்தருளத் தரிசனஞ் செய்து அறப்பள்ளியை வலம்வந்து துதித்து வேறொரு மண்டப மடைந்து அவ்விடத்தொரு தபோதனரைக் கண்டு அவரருகே அமர்ந்தான். அப்பொழுது பிரசாபதியுடைய மந்திரிமார் அரசற்கு நல்லறிவுரைக்க வேண்டுமென வேண்டுகோள் செய்தனர். அவர் அரசனை நோக்கித் தேவகதி நரககதி, மனிதகதி, விலங்குகதி எனும் நாற்கதிகளை யும் அவற்றிற் பிறந்தனுபவிக்கும் துன்பக்கூறு பாட்டையும் நன்கறிவுறுத்தினர்.

"பிறந்தனர் பிறந்து சாலப் பெருகினர் பெருகிப்பின்
யிறந்தன ரென்ப தல்லா லியாவரு மின்றுகாறு [ணே
மறைந்துயிர் வாழாநின்றா ரில்லையால் வாழி நெஞ்சே
சிறந்தது தவத்தின்மிக்க தின்மையே சிந்தி கண்டாய்"

இன்னும்,

" ஆனை துரப்ப யரவுறை யாழ்குழி
நாகவிர் பற்றுபு நாலுமொருவனோர்
தேனி னழிதுளி நக்கும் திறத்தது
மானு டரின்ப மதித்தனை கொண்ணீ "

உலகில் இன்பமென யாம் மகிழ்வனவெல்லாம் ஆனையாற் றுரத்தப்பட்டுப் பாம்புறையும் ஆழ்ந்த பாழ்ங்கிணற்றுட் குதித்த ஒருவன் அங்கு நீண்டு வளர்ந்த புல்லைப்பற்றித் தூங்கும்போது, மேலே மரக்கிளையிற்றொங்கும் தேன்கூட்டினின்றும் ஒழுகி நாக்கில் விழுந்த ஒருதுளி தேனை நக்கி ஆனந்தித்த தன்மையை உடையன என்று விளக்கினர். அதனைக்கேட்டு வைராக்கியம் பிறந்த அரசன் உலக இச்சைகளெல்லாம் துன்பத்துக்கேது ; இன்பத்துக் குரியது முத்தி ஒன்றுமே எனச் சொல்லித் துறவு பூண்டான். அதுகண்ட மந்திரிமாரும் அரசனைப் பிரியலாற்றாது துறவுபூண்டனர்.

" தொகைமல ரலங்கல் சூடித்
தூநறுஞ் சுண்ண மப்பிப்
புகைநனி கமழ வூட்டிப்
புறஞ் செயப்பட்ட மேனி
சிகையினோர் சிறுமுட் டெண்டிச்
சிதைத் தழுக்கொழுகு மாயி
னகைபெரி துடைத்து நாணொடு
மிதனை நாமகிழ்த நெஞ்சே "

"ஒழுகிய கடையு நீரு முதலன வைகிப்ப லூறு
மழுகலிவ் வள்ளல் யாக்கை யகம்புற மாயிற்றுயிற்
கழுகொடு கவரும் காக்கை தடிகொண்டு காத்து
மழுகுள சுழலுமன்றே வாயிரச்சாதி மாதோ"

" ஆயினக் காலன் பாணியாம் பிறவரச செல்வ
மேயினங் களித்தியாங்கள் விழைந்துயிர்வாழும் வா
[ழ்க்கை
பாயிய வெழுந்த வேங்கை பாரிக்குமளவிற் பைம்புன்
மாயிருஞ் சுருளை மேயுமான் மறிபோலு மன்றே."

என்று முனிவர் யாக்கை நிலையாமையையும் உலக இன்பங்களின் இயல்புகளையும் எடுத்துப் போதித்தனர். பிரசாபதி யரசனுடைய புதல்வரும் பிதா தம்மைவிட்டுப் பிரிந்ததற்காக மனமிரங்கி, முத்தி வழி தேடினதற்காக மகிழ்ந்து, தங்கள் நகரடைந்து அரசாண்டிருந்தார்கள். அரசனும் அநேக நாள் கடவுள் வழிபாடு செய்து முத்தியடைந்தான்.

## 13. தமிழ் உரைநடை வரலாறு.

நம்முன்னோர், புலன்களாலறியப்படும் பொருள்களுக்கும் அவற்றின் பண்புகளுக்கும், செயல்களுக்கும், மன அறிவிற் படுவனவற்றுக்கும் தலைமுறை தலைமுறையாக இட்டு வழங்கிய ஒலிக்குறிகளைப், பிறர்க்கு எண்ணங்களை உணர்த்துதற்குத் தொன்முறை வழாது பயன்படுத்தல் மொழி எனப்படும். இவ்விலக்கணம் எல்லா மொழிகளுக்கும் அமையும்.

இவ்வாறமைவுற்ற மொழி, வழக்கும் செய்யுளுமென இருதிறப்படும். மக்கள் ஒருவரோடு ஒருவர் உரை ஆடுங்கால் ஆளும் நடை, வழக்கெனப்படும். வழக்கெனினும் வசனநடை, உரைநடை எனினும் ஒக்கும்.

உரை வழக்கிலுள்ள நடையே ஓசை பயப்ப அளந்து செய்யப்படுதலின் செய்யுள் எனப்படும். செய்யுள் என்பதற்குச் செய்யப்பட்டதென்பது பொருள். தூக்கு என்பது செய்யுளுக்கு மற்றொரு பெயர். தூக்கு என்பது அளவு என்னும் பொருட்டு. ஆகவே, தூக்கு, செய்யுள் என்னும் சொற்கள் ஒரே பொருளனவாதல் காண்க. பா என்பதும் செய்யுளை உணர்த்தும். ஓசை சம்பந்தமாகச் செய்யுட்கு 'பா' வென்று பெயரிடப்பட்டிருக்கின்றது.

"பா என்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாட மோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்த்தற் கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோரோசை," எனப் பேராசிரியர் பாவென்பதற்குப் பொருள் விரித்துரைத்தார்.

ஒரு பொருட்குரிய பல தன்மைகளுள் ஒவ்வொன்றையும் அடிப்படையாகக்கொண்டு தோன்றிய ஒருபொருட் பல பெயர்களை நாம் நிகண்டு நூல்களிற் கண்டறியலாம்.

முற்கால மக்கள், உரையாடும்போதும் எழுதும்போதும் ஆண்ட நடைகள் வெவ்வேறு வகையின. பேச்சு நடை எப்பொழுதும் வசனநடையாக அமைவுற்றது. எழுதுங்கால் எப்பொழுதும் செய்யுள் நடையே கையாளப்பட்டது. இதற்குக் காரணம் பலவாகலாம். செய்யுள்நடை மிகவுஞ் சுருக்கமானது. வசன நடையில் அதிகம் கூறவேண்டியவற்றைச் செய்யுள் முறையிற் சில வரிகளிற் சுருக்கிவிடலாம். ஓலைகளில் எழுத்தாணியால் எழுதவேண்டியிருந்த காலத்தில் இச்சுருக்கு முறையை மக்கள் விரும்புதல் இயல்பாகும். அச்சுச்சாதன மில்லாத முற்காலத்தில் நூல்கள் எழுதற்படற்கும் படி எடுத்தற்கும் செய்யுள் முறை அநுகூலமளித்தது.

இக்காரணங்களினாலேயே முற்கால நூல்கள் எல்லாம் செய்யுள் வடிவிற் காணப்படுகின்றன.

காலத்துக்குக்காலம் மக்கள் ஆளும் சொற்கள் மாறுபடுகின்றன. ஒரு காலத்தில் பெருவழக்கிலிருந்த சொற்கள் பல, மறைந்துபோகப் புதிய சொற்கள் வழக்கில் வருகின்றன. புதிய சொற்கள் வழக்கில் வந்த காலத்தில் எழுதப்படும் நூல்களில் பழைய சொற்களின் பிரயோகம் பெரும்பாலும் நின்று விடுகின்றது. ஆகவே பிற்காலத்தவர்களுக்கு முற்காலத்தில் எழுதப்பட்ட நூல்களைப் பயின்று பொருள் விளங்குவது கடுமையாகின்றது. இக்காரணத்தால் முற்கால நூல்களுக்கு வழக்கு (வசன) முறையில் பொருள் எழுதப்படுகின்றது. இவ்வாறு எழுதப்படும் பொருட்பகுதிகள் உரையென வழங்கும். உரை எழுதும் இம்முறையிலிருந்தே பிற்காலத்தில் வசன நூல்கள் எழுதப்படலாயின.

உரை நடைக்கு அடிவரையறை முதலியன இல்லை. முற்கால உரையாசிரியர்களின் உரைநடைகளின் பல பகுதிகள் செய்யுட்கள் போலவே செல்கின்றன. அக்கால மக்களின் வழக்கு எனப்பட்ட பேச்சு நடை, அவ்வாறு இருந்ததெனக் கூறுதல் அமையாது. அவ்வுரைகளைப் பார்த்து அக்கால உரைநடை எவ்வகையினதென ஒருவாறு சிந்தனை செய்து அறிந்துகொள்ளுதல் கூடும்.

தொல்காப்பியம் என்னும் பழைய தமிழ் இலக்கணநூல் கி. மு. 350-க்குப் பிற்பட்டதன்று எனக் கருதப்படுகின்றது. அந்நூல் உரை நூல்களைப் பற்றிச் சிறிது கூறுகின்றது (சூ. 485). அவை,

பாட்டுகளின் இடையிடையே உரைநடையினியன்ற பகுதிகள் வைத்துச் செய்யப்படுவன; சூத்திரத்துக்குப்பொருள் எழுதுவனபோல்வன; ஒழிந்துபோனபா பாடல்களுக்குப் பொருள் எழுதுதல்போல்வன; செவிவழக்கில் வரும் கட்டுக்கதைகள் போல்வன; பொய் எனப்படாது உலகியலோடியன்று நகை விளைக்கக்கூடிய கதைகள் போல்வன.

இவ்வகையான பழைய நூல்கள் ஒன்றேனும் இன்று காணப்படவில்லை. பற்பல காரணச்செறிவால் மாண்ட தமிழ் நூல்களோடு இவையுங்கூட மடிந்தனவாகலாம்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இளங்கோவடிகள் என்னும் அரசப்புலவர் பாடிய சிலப்பதிகாரத்தில் உரைப்பாட்டுகள் சில காணப்படுகின்றன. அவை அடிவரையின்றிப் பாட்டு நடையில் அமைந்துள்ளன. உதாரணம் :—

> "அதுகேட்டுக் கடல் சூழிலங்கைக் கயவாகுவென்பான் நங்கைக்கு நாட்பலி பீடிகை முந்துறுத்தாங்கு அரந்தை கெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்களகவயினாங் கோர் பாடி விழாக்கோள் பன்முறை யெடுப்ப மழை வீற்றிருந்து வளம்பல பெருகிப் பிழையா விளையுநாடாயிற்று".

இந்நடை பெரும்பாலும் ஆசிரியத்தை ஒத்திருக்கின்றது. கி. பி. முதலாம் நூற்றாண்டுவரையில் ஆக்கப்பட்ட இறையனாகப் பொருளுக்கு, மதுரை ஆசி

ரியர் நக்கீரனாரும் பிறசங்கப் புலவர் சிலரும் உரை கண்டனர். அவ்வுரைகள் பலவற்றுள்ளும் நக்கீரனார் கண்ட உரையே சிறந்ததெனக் கொள்ளப் பட்டது. அவ்வுரை எழுதப்படாது தலைமுறை தலைமுறையாகச் செவி வழக்கில் வந்து, கி. பி. 7-ம் நூற்றாண்டு வரையில் நீலகண்டனார் என்னும் ஆசிரியர் ஒருவரால் எழுதிவைக்கப்பட்டது. இவ்வுரையிற் சில பகுதிகள் செய்யுள்போலவே அமைந்துள்ளன. உதாரணம் :—

> "யாங்கனம் நிற்குமோ? எனின், சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகமும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து, நாகமும் திலகமும் நறவும் நந்தியும் மல்லிகையும், மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழலும் பைங் கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கொடு முகைசிறந்து, வண்டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்கள் இசைபாட, தண்தென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் பொழிலது நடுவண், ஒரு மாணிக்கச் செய்குன்றின்மேல், விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து வண்டு துவைப்பத் தண்தேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள்."

ஒன்பதாம் நூற்றாண்டில் பெருந்தேவனார் என்னும் புலவர் செய்த பாரத வெண்பாவின் இடைஇடையே வசனபாகங்கள் காணப்படுகின்றன. சங்க காலத்தே பெருந்தேவனார் இன்னொருவர் இருந்தார். இவரே ஆதியில் பாரதத்தை வெண்

பாவிற் பாடினர். இவரது பாடல்கள் சிதைந்து போன பிற்காலத்தில் இரண்டாம் பெருந்தேவனார் பின்னோர் பாரத வெண்பாச் செய்தாரென்றும் முதற்பெருந்தேவனாரின் பாடல்கள் இவர் பாடல்களின் இடைஇடையே காணப்படுகின்றன என்றும் கூறுப. இரண்டாம் பெருந்தேவனார் சங்கத் தொகை நூல்கள் பலவற்றுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கின்றார்.

பாரத வெண்பாச் செய்யுட்களையும் அவர் சங்க நூல்களுக்குப் பாடிய கடவுள் வாழ்த்துக்களையும் நோக்குவாருக்குப் பாரத வெண்பாக்களின் இடையிடையே காணப்படும் வசனபாகங்கள் பிற்காலத்து வைணவர் எவராலோ எழுதிச் சேர்க்கப்பட்டன வெனத் தெற்றெனப் புலப்படும். பெருந்தேவனார் பாரத வெண்பாவிலுள்ள உரைநடைக்கு உதாரணம்:

> "இவ்வகை பேசிய அசரீரியாய ஆதித்ய பகவானும் அந்தர்த்தானஞ் செய்தபின்பு கன்னனுடைய தியாக சத்தியின் மகானுபாவங்கண்டு தேவசாதிகளும் ஆச்சரியப்பட்டுப் புஷ்பவர்ஷம் பொழிந்தார்."

இந்நடை மணிப்பிரவாளம். மணிப்பிரவாளமென்பது சரிக்குச்சரி சமஸ்கிருதமுந் தமிழுங் கலந்த நடை.

கி. பி. 12-ம் நூற்றாண்டுக்கும் கி. பி. 14-ம் நூற்றாண்டுக்கு மிடையில் இளம்பூரணர், பேராசிரியா,

சேனாவரையர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்கள் விளங்கினர். இவர்களின் உரைநடை மிகவுந் தெளிவுடையன. இளம் பூரணரின் உரைநடை :

"என்றது இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின் கண்ணும் வரும் நண்பகற் பொழுது காலமாம் என்பதூஉம், ஆண்டு இயங்கும் நெறி நிலமாம் என்பதூஉம் உணர்த்தியவாறு. இளவேனிலாவது, சித்திரைத் திங்களும் வைகாசித் திங்களும். முதுவேனிலாவது ஆனித்திங்களும் ஆடித்திங்களும். நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு"

பேராசிரியர் உரைநடை :

"அறத்தொடு நிற்றல்; தலைவி தோழிக் குரைத்தல்."
"யாம் முன்பொருநாள் கடற்கரையிடத்தே வண்டல் செய்து விளையாடா நின்றேமாக, அந்நேரத்தொரு தோன்றல் நம் வண்டல் மனைக்குயாம் விருந்தென்று வந்து நின்றபொழுது நீ பூக்கொய்யச் சிறிது புடை பெயர்ந்தாய். அந்நிலைமைக்கட் கீழ் காற்று மிகுதலாற் கரைமேலேறுங் கடல், மேல் வந்துற்றது. உற, யானேடீ! தோழியோ! தோழியோ! என்று நின்னை விளித்தேன்; அது கண்டிரங்கி அவ னருளோடு வந்து தன் கையைத் தந்தான். யானு மயக்கத்தாலே அதனை நின் கையென்று தொட்டேன். அவனும் பிறிதொன்றுஞ் சிந்தியாது, என்னுயிர் கொண்டுதந்து, என்னைக் கரைக்கண் உய்த்துப் போயினான்; அன்று என் நாணினால் நினக்கதனைச் சொல்ல மாட்டிற்றிலேன்."

சேனாவரையரின் உரைநடை :

" யானை நூல் வல்லானொருவன் காட்டுப் போவுழி ஓர் யானை அடிச்சுவடுகண்டு இஃதரசுவா வாதற்கேற்ற இலக்கணம் உடைத்து என்றவழி."

நச்சினார்க்கினியர் உரைநடை :

"மன்னர் பின்னோரென்ற பன்மையான் முடியுடையோரும், முடியில்லாதோரும், உழுவித்து உண்போரும், உழுதுண்போருமென்ன மன்னரும் வேளாளரும் பலரென்றார். 'வேளாண்மாந்தர்க்கு' 'வேந்துவிடுதொழில்' என்னும் மரபியற் சூத்திரங்களான் வேளாளர் இருவகையரென்ப. அரசரேவுந்திறமாவன பகைவர்மேலும் நாடு காத்தன்மேலும் சந்து செய்வித்தன்மேலும் பொருள்வருவாய் மேலுமாம்."

அடியார்க்கு நல்லார் உரைநடை :

"இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்ச பாரதிய முதலாகஉள்ள தொன்னூல்களிறந்தன. நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்திய முதலாயுள்ள தொன்னூல்களிறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றிய மென்பவற்றுள்ளும் ஒரு சார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது, முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தன போலும்."

பரிமேலழகர் உரைநடை :

"இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத் தழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய

மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரானெடுக்கப்பட்ட பொருள் நான்கு: அவை அறம், பொருள் இன்பம், வீடென்பன."

பரிமேலழகருக்குப்பின் இருந்த உரையாசிரியருள் விசேடமானவர்கள் நிரம்பவழகிய தேசிகர் (16-ம் நூற்றாண்டின் பிற்பகுதி), மயிலேறும் பெருமாள் பிள்ளை (கி. பி. 1670), இலக்கண விளக்க நூலாசிரியர் வைத்தியநாத தேசிகர் (1680), தமிழ்ப் பிரயோக விளக்க நூலாசிரியர் சுப்பிரமணிய தேசிகர் (கி. பி. 1680), இலக்கணக்கொத்து நூலாசிரியர் சுவாமிநாத தேசிகர் (1680), நன்னூல் உரையாசிரியர் சங்கர நமச்சிவாயப் புலவர் (கி. பி. 1700), சிவஞான முனிவர் (மரணம் கி.பி. 1785.), சொக்கப்ப நாவலர் முதலியோராவர். இவர்கள் 18-ம் நூற்றாண்டில் இருந்தவர்களாவார்கள்.

17-ம் நூற்றாண்டின் மத்தியில் கிறிஸ்தமதப் பிரசாரஞ் செய்தற் பொருட்டு இந்திய நாடுக்குவந்த றொபேட்-டி-நெபிலிபுஸ் என்னும் இதாலியர் தமிழ் கற்று முதல்முதல் தமிழில் வசனநூல் இயற்றினார். இவர் தத்துவபோத சுவாமிகள் என்னும் பெயரால் அறியப்படுவர். இவருக்குப்பின் கொன்ஸ்தாந்தி பெஸ்கி (வீரமா முனிவர்) என்னும் இத்தாலிய கிறிஸ்தவ குரு தமிழிற் சில வசனநூல்கள் செய்தனர்.

19-ம் நூற்றாண்டு தொடக்கம் தமிழில் வசன நூல்கள் எழுதப்படலாயின. அவ்வாறு நூல் எழு

தியவர்களில் விசேடமானவர்கள் விசாகப்பெருமாள் ஐயர், சரவணப்பெருமாள் ஐயர், தாண்டவராய முதலியார், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், (1823-1879), தொழூவூர் வேலாயுத முதலியார், ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை (1832-1910), பேராசிரியர், சுந்தரம் பிள்ளை (1853-1897), சபாபதி நாவலர் (—1903), வி. ஜி. சூரியநாராயண சாஸ்திரியார் 1873-1903) முதலியோர்.

# * குளிர் தூங்கும் குற்றாலம்

அருந்தவ முனிவரும் அறிவரும் அமைந்து அறம் வளர்க்கும் மலை, அழகிய குற்றால மலையாம். வானுற ஓங்கிய மலை முடியில் மஞ்சு தவழும் அழகும், வளமார்ந்த பழமரங்களின் செழுமையும் சவியுறத் தெளிந்த நெடுஞ் சுனையின் நீர்மையும், தெள்ளிய சுனைகளின் வழியே செல்லும் தீம்புனலாறு, வெள்ளிய அருவியாய் வீழும் அழகும், மெல்லிய தென்றல் நல்மணங் கமழ்ந்து, உலாவும் இனிமையும் மக்கள் மனத்தை மகிழ்விப்பனவாகும். இத்தகைய மலையில் கோங்கும் வேங்கையும் ஓங்கி வளரும்; குரவமும் குருந்தமும் நறுமணங்கமழும். தேமாவும், தீம்பலாவும் தேன் சொரிந்து திகழும். ஓங்கி வளர்ந்த வேங்கையின் மலர்களில் மதுவுண்டு திளைத்த வண்டுகள் இன்னிசை பாடி மகிழும் மாண்பினை,

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல்
வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக் கோல வண்டு
யாழ் செய் குற்றாலம்;"

என்று திருஞான சம்பந்தப்பெருமான் எழிலொழுக எழுதிப்போந்தார்.

---

* R. P. சேதுப்பிள்ளை அவர்கள் B A., A.L., விரிவுரையாளர் பல்கலைக் கழகம், சென்னை,

இங்ஙனம் அஞ்சிறைவண்டின் அரிக்கணம் ஒலிக்க நின்ற அழகிய மரங்களில், மெல்லிய முல்லை ஏறிப்படர்ந்து அரும்பீன்று இலங்கும் அழகினை,

"செல்வம் மல்கு செண்பகம் வேங்கை
சென்றேறிக்
கொல்லை முல்லை மெல்லரும்பீனும்
குற்றாலம்"

என்று நற்றமிழ் வல்ல திருஞான சம்பந்த நாயனார் அருளிப் போந்தார். இத்தகைய பொழில்களில் சோலை மயில்கள் தோகை விரித்தாடும் அழகும், மரக்கிளைகளில் மந்திகள் தாவி, விளையாடும் மாண்பும் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்வனவாம். மலைச் சாரலில் மகவொடு திரியும் மடமந்தி, குலைவாழைக் கனிகளிற் பாய்ந்து, அவற்றை மாந்தும் இயல்பினை,

"மலையார் சாரல் மகவுடன் வந்த
மடமந்தி
மலையார் வாழைத் தீங்கனி மாந்தும்
குற்றாலம்"

என்று பிள்ளைப் பெருமான் அருளிப்போந்தார். பெண்ணின் பெருமை அறிந்த கடுவன் அருங் கனிகளைக் கொய்து மந்திக்கு அளித்து மனங்களிக்கக் காணலாம்.

"வானரங்கள் கனி கொடுத்து
மந்தியொடு கொஞ்சும் :
மந்தி சிந்து கனிகளுக்கு
வான் கவிகள் கொஞ்சும்"

என்று கொஞ்சும் கவிகளைக் கண்டு நெஞ்சம் தழைத்த ஒருவர் செஞ்சொற்களால் எழுதிப் போந்

தார். இன்னும் குற்றால மலையில் தேனருவித் திரையெழும்பி வானின்றிழிந்து வட்டச்சுனையில் வீழ்ந்து ஒலிக்கும் வண்ணம் அருவி நீர்த்துமிகள் பொங்கி எழுந்து பாலாடைபோற் பரந்து மஞ்சொடு கலந்து கொஞ்சிக் குலாவுவனவாகும்.

இன்னும் வேரிலே பழம் பழுத்துத் தூரிலே சுளை வெடித்து தீந்தேன் சொரியும் குறும் பலாவில் குற்றால நாதனைக் கண்டு பழந்தமிழ் மக்கள் வணங்கினர்கள். குறும் பலாவில் முளைத்தெழுந்த "சிவக் கொழுந்தை" க்குரங்குகளும் களிறுகளும் குழைந்து வாழ்த்தி வணங்கினவென்றால் அம்மலையின் செம்மைக்கு வேறு சான்றும் வேண்டுமோ ?

மும்மதவேழம் கோதுமலர் கொய்து, மத்தகத் தேந்திப் பிடியொடு போந்து நறுமலர் தூவிக் குறும் பலா வடியிலுறையும் குற்றாலப் பெருமானை வணங்கிய பெருமையை,

"பூந்தண் நறுவேங்கைக்
கொத்திறுத்து மத்தகத்தில்
பொலிய ஏந்தி
கூந்தற்பிடியும்
களிறும் உடன் வணங்கும்
குறும்பலாவே"

என்று பெரியார் போற்றிப் புகழ்ந்தார்.

குன்றக்குறவரது தினைப்புனங்களில் ஆரமும் அகிலும் நறுமணம் கமழும். தினைப்புனம் காக்கும் கன்னியர் கல்லெறிந்து கிளியோட்டும் காட்சி சால இனியதாகும்.

காதலரும்பிய கன்னியரது கமலபாதம் தோயும் தோறும் துவண்டு குவியும் மென்மை வாய்ந்த கொடிகளிடையே, பூக்கொம்பு போன்ற மங்கையர், ஆடிப் பாடி அகங்களித்திருப்பர். இக்கன்னியர் செழுங்கிழங்கை அகழ்ந்தெடுத்துக் கொழுந்தேனைக் கவர்ந்தெடுத்துக் குன்றின் வளம்பாடிக் களிப்பர்.

இத்தகைய செம்மை சான்றமலையின் தேனருவிச் சாரலில், செண்பக மரங்கள் செறிந்து மணம் கமழும் சீரிய துறையில், சிந்தையை ஒடுக்கிய சித்தரும் முனிவரும் தங்கித் தவம் புரிவர்.

இத்தகைய மாத வரடியிலும் மந்த மாருதத்திலும் தோய்ந்த மக்கள், புன்னெறியினீங்கிப் புனிதமெய்துவரென்று பெரியோர் கூறுவர். கவலை என்னும் கருநோயை வேரறுத்து, வாட்டும் விருத்தமுமகற்றி, வானவரும் கானவரும் களித்து வாழ்ந்த அம்மலை நாட்டில்,

"ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
ஒடுங்கக் காண்பது யோகிய ருள்ளம்
வாடக் காண்பது மின்னார் மருங்கு
வருந்தக் காண்பது சூலுளை சங்கு
போடக் காண்பது பூமியில் வித்து
புலம்பக் காண்பது கிண்கிணிக் கொத்து
தேடக் காண்பது நல்லறம் கீர்த்தி
திருக்குற்றாலர் தென் னாரிய நாடே"

என்று குறவஞ்சிக் கவிஞர் நயம்படப் புனைந்துரைத்தார். வளங்கள் நிறைந்த அம்மலையில் ஓடுவது பூம்புனல் வெள்ளமேயாம்; சுருங்குவது மங்

கையர் மருங்குலேயாம்: வருந்துவது சூலுளைச் சங்கேயாம்; புதைப்பது புனித வித்தேயாம்; புலம்புவது மங்கையர் சிலம்பேயாம் என்று நயம்பட உரைத்த கவிநலம் கல்வின்பம் பயப்பதாகும். இவ்வாறு மக்கள் இன்புற்று வாழ்ந்த இனிய மலையில் பறவைகள் குதித்து விளையாடும் அழகும் பறந்து செல்லும் பான்மையும் காண்போர் கருத்தைக் கவர்வனவாகும். மாம்புறவும் மணிமயிலும் வக்காவும் கொக்கும் காக்கையும் காடையும் மலைச்சாரலில் மகிழ்ந்து விளையாடுவனவாம்.

அருஞ் சிறகடித்து அடுக்கடுக்காய்ப் பறந்து செல்லும் கொக்குகள் அசையும் முத்துப்பந்தர் போல ஆகாயத்தில் இலங்கிய அழகும், பலவகை நிறங்களோடு விண்ணிலே பறந்து வரும் பறவைகளின் கோலமும், அருள்வடிவாய அம்மையார் தந்த பஞ்சவர்ணப் பட்டாடை பறந்து வருவது போல் சைவ மேடைக் கண்களில் விளங்கித் தோற்று கின்றன.

இத்தகைய அழகிய பொழிலிடை அமர்ந்த குற்றால நாதனை அழகின் கொழுந்தாகவே கண்டு ஆன்றோர் வழிபட்டனர்.



Printed at the "Satya Nesan" Press 3-27, Broadway, Madras

**K. SUBRAMANIA PILLAI, M.A., M.L.,**
ADVOCATE
*Tagore Professor of Law (1920)*
(Professor of Tamil
ANNAMALAI UNIVERSITY)

16, RANGANATHA STREET,
T. N. MADRAS.

*Dated, 16—5—'40*

யாழ்ப்பாணத்து நவாலியூர்ப் பெரும் புலவராகிய திருவாளர் **ந. சி. கந்தையா பிள்ளை** அவர்கள் இயற்றிய **தமிழர் சரித்திரம்** என்னும் நூலானது மக்கள் தோற்றத்தைப் பற்றிய தொன்னூல்கள் பலவற்றின் ஆராய்ச்சிப் பயனாக வும் எகுப்தியர், சுமேரியர், பழைய சிந்து நாட்டினர், முதலிய பண்டை நாகரிக மக்களின் வரலாற்றினைப் பண டைத் தமிழர் வரலாற்றினோடு ஒப்பிட்டு ஆய்ந்ததின் பயனாகவும் அமைந்துள்ளது கண்டு பெருமகிழ்வடைந் தேன். இந்நூல் எளிய தமிழ் நடையில் தக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. ஐவகை நிலமக்கள், நால்வகை மரபினர், சங்க நூற்றெய்வங்கள், பண்டைத்தொழில வகைகள், தமிழர் ஆரியர் கலப்பு என்பவற்றைப் பற்றிய அரிய கருத்துக்கள் கற்பாருக்குப் புத்தறிவு பயப்பன.

இவ்வாசிரியரது **தமிழகம் என்னுஞ் சிறந்த நூலானது** நில நூலாராய்ச்சி, மொழி நூலாராய்ச்சி, தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சி என்பவற்றின் பெரும் பயனாகிய அரிய கருத்துக்கள் நிறைந்துள்ளது. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள், வீரம், காதல், கற்பு, சமுதாயப் பிரிவுகள், போர், கலை, மூலநூல் முதலியவற்றின் விவரங் களும் சங்க இலக்கியம், பிற பெருங் காப்பியங்கள் முதலிய வற்றின் சாரங்களும் இதனுள் இனிது விளக்கப்பட் டுள்ளன. தமிழரையும் தமிழகத்தையும் பற்றி இன்றி யமையாது அறிய வேண்டியவை யாவும் இந்நூலுட் காணப்படும். தமிழ் வாணருக்கு இது ஒரு நல்ல அறிவு விருந்தாய்த் திகழ்வதால் தமிழுலகம் இவ்வாசிரியருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

**கா. சுப்பிரமணிய பிள்ளை**